வெளி

இந்த இதழ் சற்றுத் தாமதமாக வருகிறது. நான் பலிபீடம் புத்தகத் தயாரிப்பில் ஈடுபட்டிருந்ததால் குறித்த நேரத்தில் இதழைக் கொண்டுவர [illegible] வில்லை. அச்சகங்களிலிருந்து புத்தகங்களை வெளியே கொண்டுவ[illegible] என்பது நேரத்தையும், உழைப்பையும் உறிஞ்சுகிற விஷயமாக இருக்[illegible] இப்படி பல எதிரிடையான சூழ்நிலைகளுக்கு நடுவில்தான் இலக்கியம் [illegible] வேண்டி இருக்கிறது.

பலிபீடம் நாடக வெளியீட்டு விழாவில் பொதுவாக நாடகம் குறித்[illegible] சர்ச்சைகள் எழுப்பப்பட்டன. நாடகம் குறித்த பல கம்பீரமான பிரச்சி[illegible] நம்மை எதிர்நோக்கி இருக்க நாம் மீண்டும் மீண்டும் Primitive ஆன [illegible] களையே சுற்றிச்சுற்றி வரவேண்டியிருக்கிறது. கவிதைக்கு பல விளக்[illegible] செய்பவர்கள்கூட நாடகம் என்று வரும்போது தங்கள் எல்லைகளை [illegible] கொள்கிறார்கள், ஒருவித புறக்கணிப்பும் இரட்டை நிலைப்பாடும் [illegible] தைப் பொறுத்து மேற்கொள்ளப்படுகிறது. ஆனாலும் அண்மைக் [illegible] நாடகம் தன் வீச்சை பரவலாக்கிக் கொண்டு வருகிறது.

கிரீஷ் கர்னாடின் 'பலிபீடம்' ஜூன் 1 முதல் விற்பனைக்கு கிடைக்கும். ரு. 15/- பல நாடகங்கள் இன்னும் வெளியீட்டுக்கு காத்திருக்கின்றன.

---

சத்யஜித்ரேயின் மறைவு ஒரு துயரம் தரும் நினைவு

---

தொடர்புக்கு: 1415, 24வது தெரு, முதல் செக்டார், K.K. நகர், சென்[illegible]
தனிச்சுற்றுக்கு மட்டும். வெளியிடுபவர்: தேன்மொழி. ஆசிரியர்: ரவி[illegible]
தனி இதழ் நன்கொடை : ரு. 6/- ஆண்டு நன்கொடை :
அச்சு: வைகை அச்சகம், 30 பத்மநாப நகர், சூளைமேடு, சென்[illegible]

---

அரங்கு'' என்பது வெறுமனே பல கைவினைகளின் தொகுதியோ, இலக்கி த்தின் ஒரு பகுதியோ, நுட்பங்களின் கூட்டிணைப்போ அன்றி, இவை னைத்தையும் உள்ளடக்கி மட்டும் நிற்கும் கலை வடிவமோ அல்ல. அது ஒரு ழ்வு; அதுவே மக்கள்; மக்கள்; தம்மிலிருந்து கலை படைப்பதே அது. லைகளுள் மிகவும் சர்வவியாபகமான கலை அரங்கக்கலை. ஏதோவொரு வில் தனது அரங்கைக் கொண்டிராத பண்பாடு உலகில் எங்கும் இருந்த ல்லை. காரணம், தமக்கு மிகவும் அத்தியாவசியமான மிகவும் அறிவைத் கின்ற மிகவும் உற்சாகத்தைத் தருகின்ற, அனைத்தையும் மக்கள் செய்து ளிப்படுத்துவதும், சாட்சியாயிருத்தலுமான கலையே அரங்கக்கலை. வ்வரங்கு, ஒரே வேளையில் காட்சிப் பெட்டகமாகவும் கருத்தரங்கமாகவும் ளது. அவ்வாறு இருப்பதன் மூலம் சமூகமொன்றின் கருத்துக்கள், கால ணங்கள், ஒழுக்கப் பண்புகள், களிப்பூட்டல்கள் யாவும் காட்சிக்கு வைக்கப் வதோடு, அதன் மோதல்கள், இரண்டக நிலைகள், அரும்பாடுகள் அனைத் அங்கு விவாதிக்கவும் படுகின்றன. அது அரசியல் முதல் அழகியல் வரை, வம் முதல் சரித்திரம் வரை அனைத்துத் துறைகளிலும் தனது பங்களிப்பைச் து வந்துள்ளது. அரங்கு நுழையாத துறை என்று எதுவும் இருப்பதரிது.

த்துக்கும் மேலாக, “அரங்கு” என்பது “வாழும்” கலைவடிவமாகும்; ஒரு செயற்பாங்கு, காலம், உணர்வு, அனுபவம் என்பவற்றில் நின்று யும், கலக்கும் ஒரு நிகழ்வு. நாடகங்களும் அரங்கங்களுமல்ல பிரதான வை; (நாடகம்) ஆடுதலும் (நடித்தற்) செயல் புரிதலுமே முக்கியமானவை . எனவே,. அரங்கு என்பது ஒரு நிகழ்வு, ஒரு சம்பவிப்பு என்ற நிலை யே தன் சிறப்பினைப் பெறுகிறது. இப்பண்பே அரங்குக்கு நிகழ்காலத்துக் தன்மையினையும், உடன் நிகழும் தன்மையினையும் ஏற்படுத்தி அதன் யல்பாகவும் அமைந்து விடுகிறது.

ளைப் போன்று அரங்கும் பல முரண்படு நிலைகளைத் தன்னகத்தே டுள்ளது - அது ஒரு கணத்துக்கு, அதாவது, நிகழும் வேளைக்கு ரிய சிறப்பினைக் கொண்டிருக்கும் வேளையில், அதனை மீண்டும் திக் காட்டக்கூடியதாகவும் உள்ளது. கணத்துக்குரியதாக இருத்தலில் ஒத்ததாகவும், மீண்டும் நிகழ்த்திக் காட்டக்கூடியதாக இருப்பதில் ருந்து வேறுபட்டதாகவும் அரங்கு இருக்கிறதே என எண்ணத் தோன் னும் திரும்ப நிகழ்த்தல் என்ற பண்பினைப் பொறுத்த வரையில் மதக் கரணங்களை (சடங்குகளை) ஒத்ததாக இருந்து. மனித வாழ்வை கிறது என்பர்.

அரங்கின் முரண்படு நிலைகளை மேலும் நோக்குவோமாயின் பின்வரு வற்றைக் காணமுடியும் - அது தன்னியலார்ந்ததாக அல்லது தன்னெழு யானதாக இருப்பினும் ஒத்திகை பார்க்கவும்படுகிற அது அனைவரும் பங்குகொள்ளும் பான்மையைப் பெற்றிருப்பினு அளிக்கை செய்யப்படுவதாகவும் உள்ளது; அது நிஜமானதாக இருப்பினு பாவனை செய்தல் என்பது இருக்கிறது. (நடிகன் நிஜம்; அவன் உரு கொண்டு செய்து காட்டும் பாத்திரம் அவனால் பாவனை செய்யப்பட்ட ஒன் நிஜமானதல்ல; காட்சியமைப்புப் போன்ற ஏனைய அரங்க மூலகங்க நடிகனைப் போன்றே தம்மியல்பின் நிஜத்தையும், தாம் குறிக்கும் ஒன்றி பாவனை செய்தும் நிற்கின்றன) அது புரிந்து கொள்ளக்கூடிய ஒன்றாக பினும் தெளிவற்றதாகவும் உள்ளது; பார்வையாளர் அரங்கில் நிகழ்வதை கின்றனர் என்ற போதிலும் அவர்கள் நம்புவதுமில்லை (நம்புதல், நம் என்ற இரட்டை நிலையில் அரங்கில் பார்வையாளர் இருப்பர். முற்றிலு பாத நிலையில் இருந்தால் அவர்கள் அரங்கு தரும் அனுபவத்தைப் பெ தவறிவிடுவர். அதே வேளையில் முற்றுமுழுதாக நிஜமென நம்பிவி உள்ளத்துக்குரிய அனுபவத்தைப் பெறமாட்டார். எனவே, அரங்கில் பார் யாளர் "அறிதுயிலை" ஒத்ததொரு நிலையில் இருப்பவர் எனலாம்) பார்வையாளர் அரங்கில் நிகழ்வனவற்றோடு ஈடுபாடு கொண்டவராக இ வேளையில் விலகியும் நிற்கின்றனர்.

இத்தகைய முரண்படு நிலைகள், அரங்கின் தன்மையிலுள்ள குறைபா லும் பலவீனங்களாலும் முளைவிடுவனவல்ல; அவைதாம் அரங்கின் பல கருதப்படுபவை; அதாவது, மனிதவாழ்வின் தெளிவின்மை என்ற தன் னும் முரணணித் தன்மையுடனும் அரங்கு கொண்டுள்ள உறவாலும், அ யாலுமே அத்தகைய முரண்படு நிலைகள் அரங்கின் பலமாகின்றன. வாழ்வினை மிகவொத்ததாகவுள்ள கலைவடிவமாவதற்கும் இதுவே கா கிறது. "இது, இதுவேதான்" என்ற ஐயந்திரிபற்ற தெளிவு நிலவாமை வுக்கும் அரங்குக்கும் பொதுவாக உள்ள நிலையாகும்; அதுவே அவ இயங்கியல் திறனாகவும் அமைகிறது.

இவ்வாறு பல வழிகளில் வாழ்வினை ஒத்திருக்கும் "அரங்கு" ஒரு சமூக யாக விளங்குவதில் வியப்பில்லை. அரங்கு, தான் வாழும் உலகினைக் தறித்ததாக நிற்கிறது. (இவ்விடத்தில் நாம் "வாழ்வின் ஒரு துண்டு," "வா கண்ணாடி" என்ற கோட்பாடுகளைக் குறிப்பதாக மயக்கல் கொள்ளா அவசியம்.) மனித இனம் அதன் மாறிலி. (மாறாது நிலையாக பொருள்) மனிதன் அதன் ஆய்வுப் பொருளாகவும் விளிக்கப்படு பொரு இருப்பதன் காரணமாகவே, அரங்கின் உலகப் பொதுமைப் பண்பு பிற

ங்கு மக்கள் மயமானது. செயலை அடித்தளமாகக் கொண்ட ஆற்றுகைக் கலைதான் அரங்கக்கலை. அச் "செயல்" என்ற அடித்தளத்தினூடாக, வாழ்வினை ஒத்ததொரு தோற்ற நிலைமூலம், மனித அனுபவத்தின் இயல்பும் வீச்சும் நோக்கப்படுகிறது. வேறுவகையாக இதனைக் கூறுவதாயின், மனித நிலைப் பாடுகளை நடித்தல் என்பதனை மிகவும் துல்லியமாக ஆய்ந்தறிந்தும், பிரதிநிதித்துவப்படுத்தியும் நிற்கும் கலை வடிவமே அரங்கம்.

நாடகம் ஒரு சிந்தனைக் களஞ்சியமாகவும், மனச்சாட்சியின் தூண்டுகோலாகவும், சமுதாய நடத்தையின் விளக்கமாகவும், விரக்தி, சோர்வு, ஆகியவற்றை விரட்டும் படைக்கலமாகவும், மனித வளர்ச்சியின் ஆலயமாகவும் இருக்க வேண்டும்" என்று ஆங்கில நாடகாசிரியர் பெர்னாட்ஷா கூறுகிறார். ஒவ்வொரு கலையும் மனித உணர்வைக் குறியீடாக வெளிப்படுத்துகிறது என்பர். அந்த வகையில், வாழ்வினை ஒத்ததாகவும், மனிதனை ஆய்வுப் பொருளாகவும் கொண்ட நாடகம், மனிதனின் உணர்வுகளின் வெளிப்பாடாக அமைவதில் வியப்பில்லை.

மனித முரண்பாட்டின் மோதலின் கதையே நாடகம் எனக் கூறப்படுவதுண்டு. இக்கூற்று வாழ்வுக்கும் நாடகத்துக்குமிடையிலுள்ள மிகவொத்த தன்மையையும் வலியுறுத்துவதாக அமைகிறது. பல்வேறுபட்ட முரண்பாடுகளின் மொத்தத் தொகுதியே வாழ்வு, எனக் கூறுமளவுக்கு வாழ்வு முரண்பாடுகள் மலிந்த ஒரு களமாக இருப்பதை நாம் காண்கிறோம். முரண்படு நிலையிலுள்ள மனிதனையே நாடகம், அரங்கில் விட்டு ஆய்வு செய்கிறது. மனித முரண்பாடுகள் பல மட்டங்களில் நிகழ்கிறது - தனியொருவர்தன்னுள், இன்னொருவருடன், சமூகத்துடன், கோட்பாடுகளுடன் முரண்படுதல் என்ற நிலையிலும்; இனம் இனத்தோடு, மதம் மதத்தோடு, நிறம் நிறத்தோடு, வலயம் வலயத்தோடு என்ற நிலையிலும் முரண்பாடுகளும் மோதல்களும் பல மட்டங்களில் நிகழும், இம்மோதல்களால் விளையும் சிந்தனைகள், உணர்வுகள் என்பன வாழ்வில் செயல்களாக மாற்றம் பெறுவது போன்று, நாடகத்திலும் இயக்கமாக/செயலாற்றுகையாக வெளிப்படுகின்றன. இவ்வியக்கமே நாடகத்தை "செய்தற்குரியதாக்குகின்றது; பார்த்தலுக்குரிய கலையாக்குகின்றது;அரங்கை "பார்த்தற்குரிய" இடமாக்குகின்றது. இதனால், "செய்தலும்" "பார்த்தலும்" ஆற்றுகையில் இன்றியமையாத தொழிற்பாடுகளாக அமைந்து விடுகின்றன. செயல் புரிவோர், அதாவது செயலை நிகழ்த்திக் காட்டுவோர் "ஆற்றுவோர்" எனவும், அச்செய்து காட்டலைப் பார்ப்போர் அவையோர் அல்லது பார்வையாளர் எனவும் கருதப்படுகின்றனர். இவ்விருசாராரும் இல்லாது அரங்கம் இருக்க முடியாது எனவேதான், அரங்கின் மூலகங்களுள் ஆற்றுவோரும் (நடிகர்) அவையோரும் (பார்வையாளர்) மிக முக்கியமான மூலகங்களாக இருப்பதைக் காணலாம்.

ஆயினும், அவையோர் வெறுமனே வாளாயிருந்து செய்து காட்
படுவதை ''நுகர்வோராக'' மட்டும் இருக்கின்றனரா என்ற வினா
கிறது. அந்தச் செய்துகாட்டலின் சிருஷ்டியில் பார்வையாளருக்குப் பங்
லையா? சலனப்படம் அல்லது தொலைக்காட்சிப்படம் எனில் அதில் பார்
யாளர் வெறும் ''நுகர்வோர்'' மட்டுமே. அவர்களால் அவ்வாற்றுகைக
எந்தவொரு பாதிப்பையும் ஏற்படுத்திவிட முடியாது. இவர்களின் எ
வினைகள் சினிமா, தொலைக்காட்சிப் பொறிகளில் எந்தவித விளைவு
யும் ஏற்படுத்திவிடாது. காரணம், அவை உயிரற்ற பொறிகள். ஆனால் அ
கின் ஆற்றுவோர் உயிரும் உணர்வுமுள்ள மனிதர். வாழும் மனிதர்; அத
லேயே அரங்கம் "வாழும்" அரங்கமாகிறது. நாடகம், அரங்கம் ஒரு வ
நிலையிலிருக்கின்ற, உயிர்த்திறம் கெடாத கலை என்பதுவே அதன் த
துவமாகும். "வாழும்" கலைஞர், "வாழும்" பார்வையாளர் ஆகிய இருசார
இணைவுதன் மூலமே அரங்க ஆற்றுகை சாத்தியமாகின்றது. ஒரு ஆற்
யின் வெற்றிக்கு மட்டுமன்றி, அதன் தோல்விக்கும்கூட, ஆற்றுவோரு
பார்வையாளரும் சேர்ந்தே பொறுப்பு வகிக்கின்றனர் என்ற கருத்தை
இங்கு கவனத்தில் கொள்வது அவசியம்.

ஆற்றுகையின் தன்மைக்கும், பண்புக்கும், மோடிக்குமமையப் பார்வையாள
பங்கு கொள்ளல் அளவு வேறுபட்டிருக்கும் என்லாம். சில வகை ஆற்
களின்போது பார்வையாளர் சாத்வீக நிலையிலிருந்து தமது உணர்
மட்டும் பங்கு கொள்வர். வேறு சில ஆற்றுகைகளில் அவர்கள் தமது உ
நால், அறிவால் பங்கு கொள்ளும் நிலை ஏற்படும். மேலும் பல ஆற்
முறைமைகளில் பார்வையாளர் அறிவால் மட்டுமன்றித் தமது பௌதிக வே
பாடுகளாலும் ஆற்றுகையில் பங்கு கொள்வர். எந்த வகையில் நோ
கினும், பார்வையாளரின் பங்கு கொள்ளல் இல்லாது ஆற்றுகை மு
பெறாது என்பது மட்டும் உண்மை எனலாம்.

எனவே, நாடகம் அரங்கம் ஒரு சுயேட்சையான கலை வெளிப்பாடு
கருதுவது தவறாகும். அதற்குச் சில சமூகக் கடமைகள் உள்ளன. வா
செய்பவற்றினதும் நிகழ்வனவற்றினதும் எதிர்விளைவாகவே நாட
இருந்து வந்துள்ளது. உலகப் பொது நிலையில் வைத்து இனங் க
கொள்ளக் கூடியதாகவும், புரிந்து கொள்ளக் கூடியதாகவும், வாழ்வு
மனிதன் செய்யும் வியாக்கியானமே கலை என்பர். கடந்த கால அனு
வால் ஏற்பட்ட படிமங்களை மீளவும் நினைவுக்குக் கொணர்ந்து ம
தனது கருத்துக்களைக் கற்பனை கலந்து படிமங்களாகக் கலை மூலம்
படுத்துகிறான். அப்படைப்பு வாழ்வு அன்றி வேறு எதுவுமில்லை எனக்
கூடியதாக இருப்பினும், வாழ்வைப் போன்றதாக இருப்பினும், வாழ்வு
யும் ஒன்றல்ல; கலைவாழ்வு பற்றிய கலைஞனின் வியாக்கியானமே அ
வாழ்வின் மறுபதிப்பாகாது.

இத்தகைய கலைப்படைப்பொன்று உணர்வையும் சிந்தனையையும் தூண்ட வேண்டும்; தூண்டாத எதுவும் கலைப்படைப்பெனப்படமாட்டாது, கலைப் படைப்பின் எதிர் வினையாக, பார்வையாளனிடத்து சிந்தனை தூண்டப்பட வேண்டும். அச்சிந்தனை, வாழ்வு பற்றியதொரு ஆழமான உணர்வையும் வாழ்வோடு மனிதனுக்குள்ள உறவையும் வெளிப்படுத்துவதாக அமையும். இந்த வகையிலேயே, வாழ்வோடும் மனிதனோடும் மிக நெருக்கமாகவுள்ள நாடக/அரங்கக்கலையானது வெறுமனே ஒரு களிப்பூட்டலுக்கான நிகழ்வாக அமையாது, வாழ்வின் அர்த்தங்கள் வழங்கப்படும் இடமாகவும், மனித முக்கி யத்துவங்கள் கண்டுபிடிக்கப்படும் இடமாகவும், அனைவரும் இணைந்து உண்மைகளைத் தேடியடையும் இடமாகவும் கருதப்பட்டு வருகிறது.

நன்றி : வெளிச்சம் - இலங்கை

## நிஜ நாடக இயக்கம் - நாடக விழா - மதுரை

**மே 22**

காலை 10-00 : தொடக்க விழா
நண்பகல் 12-00: நிஜநாடக இயக்கம் வழங்கும் நாடகம்
பிற்பகல் 3-00: நவீன நாடகப் பிரச்சினைகள் கலந்துரையாடல்
பேரா. எஸ்.பி. சீனுவாசன்,
பேரா: சே. இராமானுஜம்,
பேரா. செ. ரவீந்திரன்,
திரு. இளைய பத்மநாதன்
மாலை 5-00: சுற்றுப்புறச் சூழல் சீர்கேடு பற்றி கூத்துப் பட்டறையின் நாடகம்.
இரவு 7-00: அச்சாணி
(மதுரை காமராசர் பல்கலையின் நாடகக் கலைப்பள்ளி)
இரவு 8-00: சதிபர்வம்
(M.R.I. ஆடியோ விஷுவல் பீப்புள்)
**இடம்: மகாத்மா பள்ளி, கே. கே. நகர்**

**மே 23**

காலை 10-00: நவீன நாடகம் பிரச்சினைகள், கலந்துரையாடல்:
பேரா. வசந்தன்,
பேரா. இந்திரா பார்த்தசாரதி,
திரு. ந. முத்துசாமி,
பேரா. இராமமூர்த்தி
நண்பகல் 12-00 : ஒற்றை யானை
(ம.கா. ப. க. நாடகக்கலைப்பள்ளி, மதுரை)
பிற்பகல் 3-00 ஓவியர்கள் சந்திப்பு
பிற்பகல் 4-30 ஒருபயணத்தின் கதை
(பல்கலை அரங்கம், சென்னை)
மாலை 6-30 சிற்பியின் நகரம்
(கூட்டுக்குரல், பாண்டிச்சேரி)
இரவு 8-00 : மிருகம்
(எம்.எஸ்.ஜி. நாடகக்குழு, பாண்டிச்சேரி)
**இடம் : மகாத்மா பள்ளி கே.கே. நகர்**

**மே 24**

காலை 10-00 இறுதியாட்டம்
(சங்கரதாஸ் சுவாமிகள் நிகழ்கலைப் பள்ளி, பாண்டிச்சேரி)
பிற்பகல் 3-00 : முறைப்பெண்
(யதார்த்தா, புதுதில்லி)
மாலை 5-00 : தீனிப்போர்
(பல்கலை அரங்கம், சென்னை)
7-00 : கருஞ்சுழி
(தலைக்கோல், பாண்டிச்சேரி)
**இடம்: இராஜா முத்தையா மன்றம்**

## அறிமுகம்

மூல ஆசிரியர்: காலஞ்சென்ற டாக்டர். லஷ்மி நாராயண் லால்

தமிழில்: சரஸ்வதி ராம்னாத் (கேல் நஹிம் நாடக் என்ற தொகுப்பிலிருந்து)

பாத்திரங்கள்: மிஸ்டர் அனில்
மிஸ்டர் ஜோஷி
மற்றும் சிலர்.

---

(இரவு நேரம். மேடையின் மீது ஒளி பரவத் துவங்கும்போதே பின்புலத்திலிருந்து பல குரல்கள் ஒலிக்கின்றன. சில தெளிவாக உள்ளன. “பைத்தியம்—பைத்தியம்”, “நாடோடி”, ‘பித்தம் பிடித்தவன்’, ‘கிறுக்கு’, ‘இரவு பகல் ஊர் சுற்றுகிறான்’, ‘இந்த வட்டாரத்தையே அசிங்கமாக்கப் பார்க்கின்றன’ ‘மூளை புரண்டு விட்டது’ ‘இங்கிருந்து போய்விடு’, “நீங்களெல்லாம் இங்கு இப்படி வாழ்வதை எங்களால் சகித்துக்கொள்ள முடியாது”, “இது நாணயமான, மரியாதையான, நேர்மையானவர்கள் வசிக்கும் இடம்”.

இத்தகைய கூச்சல்களுக்கிடையே அனில் மேடையில் தோன்றுகிறான். இந்தக் கூச்சல்கள் அவனை அடித்துத் துரத்தி மேடையில் தள்ளி விட்டதுபோல் தோன்றுகிறது.)

அனில்: நான் கூறுவதைக் கேளுங்கள். சற்றுக் கேளுங்கள். நீங்கள் ஏனிப்படி செய்கிறீர்கள்? என் மீது இவ்வளவு கோபித்துக் கொள்வதால் என்ன பிரயோஜனம்? இப்படியெல்லாம் ஏன் கூறுகிறீர்கள்? என் உடைகள் அழுக்காக இருக்கின்றன. என்னால் ஷேவ் செய்துகொள்ள இயலவில்லை. ஆனால் நீங்கள் என்னை ஏன் இப்படியெல்லாம் திட்டுகிறீர்கள்? நான் உங்களுக்கு என்ன கெடுதல் செய்தேன்? உங்களையெல்லாம் கண்டு நான் பயப்படவில்லை என்பது சரி. எனக்கு உங்களையெல்லாம் கட்டோடு பிடிக்கவில்லை. நான் பொய் பேசுவதில்லை. ஆம்... ஆம். நீங்கள் பொய்யர்கள். கோழைகள். ஆமாம். நான் உடல் நலமில்லாதவன். நோயாளி. ஏன் தெரியுமா? உங்கள் எல்லோருக்கும் நடுவே நான் உயிர் வாழ விரும்புகிறேன். உங்களுக்கு என்னைப் பற்றிய விபரமெல்லாம் எதற்காக சொல்ல வேண்டும்? நீங்கள் யார்? ஆமாம்—ஜோஷி என் நண்பன். அவன் யார், எந்த ஊர்? எங்கே போனான்? இதெல்லாம் அவனிடம் நான் ஏன்

கேட்க வேண்டும்? அவன் என் நண்பன். அது போதும் எனக்கு. உங்களுக்கெல்லாம் நான் என்னைப் பற்றிய விபரமெல்லாம் கூற வேண்டுமா? என் நண்பனிடம் அர்த்தமற்ற கேள்விகளைக் கேட்க வேண்டுமா? அவன் குஜராத்தி. நான் வங்காளி. நீங்கள் பிராமணர். நான் க்ஷத்திரியன், அவன் சூத்திரன்.. இதெல்லாம் என்ன காட்டுத்தனமான விஷயங்கள்! நாகரிகமற்ற பேச்சு! (ஓரிரு நிமிடங்களுக்குப் பிறகு) நீங்களெல்லாம் போகலாம். உண்மைதான். எனக்கு உடம்பு சரியில்லை. எனக்கு உறக்கம் வரவில்லை. (ஜோஷியிடம் பேசுவது போன்ற பாவனையில்) ஏய்! ஜோஷி! நண்பா... இவர்களையெல்லாம் கொஞ்சம் பேசாமல் இருக்கச் சொல்லேன்! இங்கிருந்து வெளியே தள்ளிவிடேன்! நம்மைப் பற்றிய அறிமுகம் என்ன இருக்கிறது? நாம் எங்கிருந்து வந்தோம்? இங்கே ஏன் இருக்கிறோம்! என்ன விஷயம்! போ-போய் சொல்லிவிட்டு வா! நண்பா! ஜோஷி! சிகரெட் கொடுப்பா! (பேசிப் பேசிக் களைத்தவனாய் தரையில் அப்படியே படுத்துவிடுகிறான்) விடப்பா! டாக்டர்கள் கிடக்கிறார்கள்! என்ன வேண்டுமென்றாலும் சொல்லட்டும்! இந்த மாதிரி உயிர் வாழ்ந்து என்ன செய்யப் போகிறோம்! வாஹ்—வாஹ்! உயர்தரமான சிகரெட்! இதில் என்னென்ன கலக்கிறார்கள்... என்னென்ன... (உறங்கிவிடுகிறான். சற்று நேரத்திற்குப் பிறகு அதே சத்தம்) அதே கூக்குரல்கள். இம்முறை சொற்கள்பின்னும் தெளிவாக உக்கிரமாக உள்ளன. "நேற்றைய பயல்கள் தங்களைப் பெற்றவர்களின் முகத்தில் கரியைப் பூசுகிறார்கள்! மரியாதை, நாகரீகம், பண்பு எதுவும் கிடையாது சுத்தமாய்! இந்த வட்டாரத்திலிருக்கும் பையன்களையே கெடுத்து விடுவார்கள் போலிருக்கிறது. போங்கள் இங்கேயிருந்து! இந்த ஊர்சுற்றித்தனமெல்லாம் இங்கே செல்லாது! இது தரமான, நாணயஸ்தர்கள் வசிக்கும் இடம்... போங்கள் இங்கேயிருந்து! (இம்முறை ஜோஷி மேடையில் தோன்றுகிறான்.)

ஜோஷி : ஓடிப்போங்கள்! இங்கேயிருந்து! இல்லாவிடில் உங்கள் ஒவ்வொருவருடைய கழுத்தையும் நெறித்துவிடுவேன். வாயைமூடிக் கொள்ளுங்கள்! ஆம்...ஆம்...நீங்கள் கூறியதையெல்லாம் கேட்டுக் கொண்டாகிவிட்டது! இனி நீங்கள் போகலாம். போய் சாப்பிட்டுவிட்டுத் திரும்பி வாருங்கள். நீங்களெல்லாம் கோழைகள். பயந்தாங்கொள்ளிகள். மோசடியாளர்கள். ஆமாம் - ஆமாம். நாங்கள்னன்நடத்தையில்லாதவர்கள்... உங்கள் நடத்தையின் மீது மிக நேர்மையாளர்களென்ற வெண்ணையைப் பூசிக்கொண்டு அதை நீங்க்ளே வழித்துச் சாப்பிடுங்கள். எங்களை நீங்கள் ஒன்றும் செய்து விட முடியாது.

(தைரியமிருந்தால் வெளியே வா- என்ற குரல் கேட்கின்றன.)

ஜோஷி : இதோ பார் ! வந்துவிட்டேன். (பார்வையாளர்களை நோக்கி) வெளியேயிருந்து சற்று உள்ளே போய் ஓய்வெடுக்கலாம் என நினைத்தேன் ஆனால் நீங்கள் ! ஏன் முறைத்துப் பார்க்கிறீர்கள் ! வாருங்கள் ! என்ன செய்ய வேண்டுமோ செய்யுங்கள் ! கோழைகளே ! எங்களையா பைத்தியக்காரர்கள் என்று கூறுகிறீர்கள்! நாங்கள் முற்றும் பைத்தியமாகி விட்டால் எவ்வளவு நன்றாக இருக்கும்! நீங்களெல்லோருமாய் சேர்ந்து எங்களை எப்படியாக்கி விட்டீர்கள் என்று சொல்ல முடிந்திருக்குமே ! எங்களுக்கு என்ன படிப்பு தந்திருக்கிறீர்கள்! என்னவெல்லாம் எங்களுக்கு அளித்திருக்கிறீர்கள் ! எங்கள் முகங்களிலே ஓட்டை போட்டு அதில் நீங்கள் எதை எதையெல்லாம் நிரப்ப விரும்பினீர்கள் ! இத்தனை ஆண்டுகளில் உங்களில் ஒவ்வொருவரும் தனித்தனியாக உங்களை பற்றியே சிந்தித்தீர்கள். கவலைப்பட்டீர்கள். உங்களில் ஒவ்வொருவரும் இன்னொருவருக்கு எதிரி...ஹூம்...எங்களால் இதற்கெல்லாம் கணக்கு கொடுக்க முடியவில்லை. வரிசையாக சொல்ல முடிந்தால் நீங்களெல்லாம் அலுவலகத்தில், கல்லூரியில், சபாக்களில், வீடுகளில் என்னென்ன செய்தீர்கள் என்று! ஆனால் சாரி... முதலிலிருந்தே கணக்கு வழக்குகளில் நாங்கள் ரொம்பவும் வீக். இதோ! இப்பொழுது எங்கே போகிறீர்கள்? கேட்டுக் கொள்ளுங்கள். நான்... ஒரு பெரிய மனிதரின் ஒரே ஒரு மகன். 1950க்குப் பிறகு என் அப்பா எப்படி திடீரென்று பெரிய மனிதரானார் என்பதை சொல்லுகிறேன்! கேளுங்கள்! அடே! ஏன் ஓடுகிறீர்கள்! கேட்க வேண்டாமா

(மீண்டும் அதே சத்தம். இம்முறை மண், கல், காகித பந்துகள் வாழைப்பழத் தோல்கள், தக்காளி எனச்சரமாரியாக அவன் மீது வந்து வீழ்கின்றன.) (கூச்சல்)

ஜோஷி : ஜாக்கிரதை! நிறுத்துங்கடா! கோழைகளே! முதுகெலும்பு இல்லாதவர்களே! என் நண்பன் மீது கொஞ்சம் அடிபட்டாலும் என்னவாகும் தெரியுமா?...

அனில் : (எழுந்து சட்டென்று ஜோஷியைப் பிடித்துக்கொள்கிறான்) போகட்டும்... இதோ! போய்விட்டார்கள்! உண்மையில் அவர்களுக்கு டிப்பட்ட தீர்மானமான எண்ணம் எதுவுமில்லை. கொஞ்சம் பொழுது போக்கு அவ்வளவுதான். எங்களாலும் எதிர்ப்புக் குரல் எழுப்ப முடியும் என்பதை நிரூபிக்கத்தான். (சிரிக்கிறான்) நண்பா! எல்லோருக்குமே இங்கு எதையாவது நிரூபித்துக் கொண்டிருக்க வேண்டியிருக்கிறது.

ஜோஷி : எல்லாவற்றையும் எத்தனை அசிங்கப்படுத்தி விட்டார்கள். பெரிதும் சுத்தப்படுத்த நம்மிடம் விளக்கமாறு கூட இல்லை.

னில் : உன்னுடைய அந்த மீனாஷி இருக்கிறாள் அல்லவா! அவள் அழகான பெண்தான் என்றாலும் எப்பொழுதும் இதை வெளிப்படுத்திக் கொண்டு, தான் அழகி என்பதை நிரூபித்துக் கொண்டிருக்கிறாள் இல்லையா? (நடித்துக் காட்டுகிறான்) எப்படி நடக்கிறாள் அவள்... இப்படி...இப்படி... கழுத்தைப் பார்... அவள் கையைப் பார்... அதுவும் அவள் பேசும் போது!

(ஜோஷி தன் மேல் சட்டையை அவிழ்த்து குப்பையை ஒதுக்க முற்படுகிறான்.)

னில் : (தடுக்கிறான்) ஜோஷி—நீ உன் அப்பாவை என்னவென்று அழைத்தாய்?

ஷி: டாடி.

ல் : அவர் எங்கே இருக்கிறார்?

ஷி: அகமதாபாத்தில்.

னில் : நான் அப்பாவை 'பாபா' என்றழைப்பேன். அவர் இப்பொழுது தன்புாத்தில் இருக்கிறார்.

ஷி: நீ ஏதாவது சாப்பிட்டாயா?

ல் : நீ.

ஷி: நான் முதலில் கேட்டது உன்னை?

ல் : இல்லை.

ஷி: நானும்கூட நாள் முழுவதும் சாப்பிடுகிறேன். சிகரெட் ஊதுகிறேன்.

ல் : நீ குடிக்கிறாய். நான் சாப்பிடுகிறேன். நான் வங்காளி. நீ குஜராத்தி

(இருவரும் சிரிக்கிறார்கள்.)

ஷி: நீ ஊர் சுற்றி!

ல் : நீ நடத்தை கெட்டவன்.

ஷி: அரே! தோஸ்த்! இந்த நடத்தை... அதாவது காரெக்டர் என்றால் என்ன?

[illegible] நாடகத்தில் வருகிறதே காரெக்டர் அதுதானப்பா!

[illegible] உனக்கொன்றும் தெரியாது. நடத்தைதான் ஆங்கிலத்தில் காரெக்டர்

(இருவரும் சிரிக்கிறார்கள்)

ஜோஷி: நீ எல்லாவற்றையும் சாப்பிடுகிறாய். நான் எல்லாவற்றையும் குடிக்கிறேன். நீ வங்காளி. நான் குஜராத்தி... இதைத்தாண்டா காரெக்டர் என்கிறார்கள். (சிரிக்கிறான்)

அனில்: அரே! நீ ஒரு வங்காளியை கிண்டல் செய்கிறாயா! நான் உன் மண்டையை உடைப்பேன். ஆமார் சோனார் பங்களா. (எங்கள் பொன்னான நாடு வங்கம்.)

ஜோஷி: எங்களுடைய பொன்னான குஜராத்.

அனில்: அதாவது நம்மிருவருக்கும் பசிக்கிறது.

ஜோஷி: நேற்றைய அந்த வரண்ட ரொட்டி எங்கே?

அனில்: அதைப் பூனை தின்று விட்டது போலிருக்கிறது.

ஜோஷி: அந்த பூனை அதாவது மீனாட்சி கபூர் வந்திருப்பாள். சொல்லுடா· நீ எப்பொழுது சாவாய்?

அனில்: நீ சாகும்போது.

ஜோஷி: அதாவது இப்பொழுது இங்கே சாப்பிடுவதற்கு எதுவுமில்லை.

அனில்: நமக்கு மிகவும் பசிக்கிறது.

ஜோஷி: ஒரு சிகரெட் கூட இல்லை.

அனில்: ஒரு சொட்டுத் தண்ணீர் கூட இல்லை.

ஜோஷி: இந்நிலையில் செக்வேரா என்ன சொல்லி இருக்கிறார்?

அனில்: போதுமடா உன் பொருத்தமில்லாத பரிகாசம்.

ஜோஷி: ஏதாவது வழியை யோசித்துத்தானே ஆக வேண்டும். இது பற்றி 'மாவோ' என்ன நினைக்கிறார்?

அனில்: அதிகப் பிரசங்கி! மண்டையை உடைப்பேன்—கிரேட் 'மாவோ'வின் பெயரை இந்தச் சந்தர்ப்பத்தில் இழுக்காதே.

ஜோஷி: சரி—சரி. உட்கார். (இருவரும் சுவற்றில் முதுகைச் சாய்த்துக் கொண்டு அமருகின்றனர்) நம்முடைய ஜாதி என்ன என்பதை முடிவு செய்து கொள்வோம். நம்முடைய விலாசம் அறிமுகம் என்னவென்பதை அப்பொழுதுதான் அவர்களுக்கு விவரமாகச் சொல்ல முடியும்.

அனில்: நாம் நாமாக இருப்பது போதாதா?

ஜோஷி: ஆனால் நாம் எந்த மொழியில் நம்மைப்பற்றி கூறுவோம். முதலில் இதை நிச்சயித்துக் கொள்ளலாம்.

அனில் : ஆங்கிலேயர்கள் என்ன ஜாதி! அவர்கள் எங்கே வசிப்பவர்கள்?

ஜோஷி: யாரைக் கேட்கிறாய்? இங்கிருந்து போய்விட்டார்களே அவர்களா? அல்லது இங்கு பிறந்தார்களே அவர்களா?

அனில் : இதென்ன மரியாதைகெட்ட தனம்?

ஜோஷி: உண்மையிலேயே நீ பைத்தியம் இல்லையே?

அனில் : (சட்டென்று எழுந்து நின்று) இதே கேள்வியைத்தான் என் அப்பாவும் கேட்டார். காலேஜ் படிப்பை விட்டுவிட்டு அந்த இயக்கத்துடன் சேர்ந்தபோது... (ஜோஷி அறைக்குள் ஓட ஆரம்பிக்கிறான்)

ஜோஷி: இதோ பார்!

அனில் : என்ன?

ஜோஷி: சாப்பாடு, டின்னர், வாழைப்பழம், ஆரஞ்சு, தக்காளி, புரோட்டின், இரும்புச்சத்து.

(தரையில் இறைந்து கிடக்கும் வாழைப்பழத் தோல்களை இருவரும் பார்க்கிறார்கள்)

அனில் : அவர்கள் எத்தனை கருணையுள்ளவர்கள்! நமக்காக எத்தனை நல்ல உணவு?

ஜோஷி: உண்மையில் நாம் இங்கே இப்படியே மடிந்துவிடுவதை அவர்கள் விரும்பவில்லை.

அனில் : ஆமாம் அவர்களுக்கு எதிர்காலத்தைப் பற்றிய கவலை இருக்கிறது.

ஜோஷி: நாம் இங்கே இறந்துவிட்டால் நமது சடலத்தை யார் எடுத்துச் செல்வார்கள்?

அனில்: அச்சா! முதலில் நாம் டின்னர் சாப்பிடுவோம். பிறகு காப்பி குடிப்போம்.

ஜோஷி: நான் டின்னருக்கு டேபிளைப் போடுகிறேன்.

அனில் : நான் பிளேட்களைக் கழுவி தயாராக வைக்கிறேன்.
(இருவரும் அவரவர் வேலைகளைச் செய்கின்றனர்)

ஜோஷி: டின்னருடன் சங்கீதமும் இருக்க வேண்டாமா...? ஸ்பூன் எங்கே? முள் கரண்டி எங்கே?

அனில் : இதோ... என் கரங்கள்.

(இருவரும் டின்னர் சாப்பிடுகிறார்கள். காப்பி குடிக்கிறார்கள். பெரிதாக ஏப்பம் விடுகின்றனர். பெருமிதத்துடன் சிரிக்கின்றனர்.)

ஜோஷி: அச்சா. குட் நைட்.

அனில்: குட் பை.

(இருவரும் தரையின் மீது படுக்கின்றனர்)

ஜோஷி: நாளைக்கு நான் ஒரு இண்டர்வ்யூக்குப் போக வேண்டும்.

அனில்: என்ன? நீ வேலை பார்க்கப் போகிறாயா? (எழுந்து உட்காருகிறான்).

ஜோஷி: கிடைத்தால் என்ன நஷ்டம்? எதுவரை இப்படி? ஏதாவது நடக்கத் தானே வேண்டும்.

அனில்: பின் ஏன் கல்லூரியை விட்டு விட்டு ஓடி வந்தாய்?

ஜோஷி: ஓடி வந்தேன்.

அனில்: வேலை பார்க்கப் போகிறாய்! இது உன்னோட முடிவா?

ஜோஷி: உன்னால் முடிவெடுக்கமுடியுமா?

அனில்: அதென்ன? நம்முடைய முடிவா!

ஜோஷி: பின், அந்த முடிவெடுப்பவன் யார்!

அனில்: நமக்காக முடிவெடுக்கும் இன்னொருவர்.

ஜோஷி: அவன் எங்கே இருக்கிறான்?

அனில்: அந்த மனிதன் நமக்குள்ளே இருக்கிறான்.

ஜோஷி: உன்னுடைய அப்பா.

அனில்: உன்னுடைய வேலை.

(இருவரும் சச்சரவிடுகின்றனர்)

ஜோஷி: உன் அப்பா.

அனில்: உன் வேலை.

ஜோஷி: அப்பா.

அனில்: வேலை.

ஜோஷி: மரியாதை கெட்டவனே.

அனில்: அயோக்கியா!

ஜோஷி: போதும் நிறுத்து. ஏண்டா திட்டினாய்?

அனில்: தோஸ்த்! இத்தனை பிரமாதமான டின்னருக்குப் பிறகு வார்த்தைகளால் மோதிக் கொள்ளாமல் வேறென்ன செய்ய முடியுமாம்? செக்வேரா என்ன சொல்லியிருக்கிறார்?

ஜோஷி: போடா...

அனில்: நான் கூடப் பாதரைச் சந்திக்க வேண்டும்.
(அனில் தரையில் படுத்து உறங்கிவிடுகிறான். ஜோஷியும் படுக்க ஆயத்தமாகிறான். ஒளி அணைகின்றது)
(மீண்டும் ஒளி பரவும்போது ஒருவர் மேஜைக்குப் பின்னே நாற்காலியில் அமர்ந்துள்ளார். மணியை அடிக்கிறார். ஜோஷி வருகிறான்)

அந்த மனிதர்: பெயர்?

ஜோஷி: பி. ஆர். ஜோஷி.

மனிதர்: ஃபாதர்?

ஜோஷி: (மௌனம்)

மனிதர்: கல்லூரிப் படிப்பை விட்டு விட்டு நக்சல்வாதிகளுடன் தலைமறைவாகி விட்டாய். அங்கிருந்து எங்கே போனாய்? என்னென்ன செய்தாய் என்பதையெல்லாம் அறிந்துகொள்ள எனக்குக் கொஞ்சமும் விருப்பமில்லை. இரண்டு வருடங்களுக்குப் பிறகு கல்லூரிக்குத் திரும்பியதும்...

ஜோஷி: காட்டின் கதை வெகு ருசிகரமான கதை. நாங்களெல்லோரும் சேர்ந்து முதலில் காட்டிலுள்ள யானைகளையெல்லாம் தீர்த்துக் கட்டிவிட விரும்பினோம். நாங்கள் வெகு வேகமாய் எங்கள் காரியத்தைத் துவங்கி விட்டோம். ஆனால் ஒரு நாள் யானையின் மீது காட்டின் ராஜா சிங்கம் அமர்ந்திருப்பதையும், சிங்க ராஜாவுக்கு, குடை பிடித்துக்கொண்டு ஆடு நிற்பதையும் பார்த்தோம். அந்த ஆட்டின் பின்னால் சிலந்தி வலை பின்னிக் கொண்டிருந்தது. அந்த சிலந்தி வலைக்குள் இந்தியா முழுவதும்...

மனிதர்: நிறுத்து உன் காட்டுக் கதையை. நீ இன்டர்வ்யூவிற்காக வந்திருக்கிறாய் என்பதை மறந்துவிடாதே. (மௌனம்). நீ இரண்டாம் முறை கல்லூரிக்குத் திரும்பினாய்... பிறகு... பிறகு. பரிட்சை ஏன் எழுதவில்லை?

ஜோஷி: வந்து...

மனிதர்: (பைலில் இருப்பதைப் படித்தவாறே) ஹைஸ்கூலில் பஸ்ட் கிளாஸில் தேறி இருக்கிறாய். இரண்டு சப்ஜெக்ட்களில் டிஸ்டிங்ஷன். இன்டரிலும் பஸ்ட் கிளாஸ். பின், பி, ஏ. பரிட்சை ஏன் எழுதவில்லை?

ஜோஷி: கல்லூரிக்கு மீண்டும் திரும்பியதும் ஒவ்வொரு மாணவனும் என்னையே உற்று உற்றுப் பார்த்தான். ஆசிரியர்கள் சந்தேகக் கண்ணுடன் என்னைப் பார்க்கத் துவங்கினார்கள். பெண்கள் என்னைப் பார்ப்பதையே தவிர்த்தனர். தங்களுக்குள் கசமுசா என்று பேசிக் கொண்டவர்: என்னைப் பார்த்தாலே மௌனமாகி விட்டனர். எனக்குப் பின்னால்

உரக்கச் சிரித்தனர். என் முன்னால்... பேரமைதிதான் சூழ்ந்து நின்றது. (சட்டென்று) சார் வேறு ஏதேனும் கேள்வி கேளுங்கள்! என்னை நம்புங்கள்! என் நடத்தையில் எந்த விதமான பழுதும் இல்லை... எஸ், சார். எஸ்.

மனிதர்: உயிருடன் வாழ எது அவசியம்?

ஜோஷி: இன்று உயிருடன் வாழ மிக மிக அவசியமானது ஒரு மனிதன் எதற்காக அவன் வாழ விரும்பினானோ அதற்காக அவனுக்கு ஏற்பட்டவை யாவற்றையும் சுத்தமாக மறந்துவிட வேண்டும். அத்தகைய வாழ்க்கையின் உயிருள்ள உதாரணம் நான். என் வாழ்வில் எனக்கேற்பட்ட யாவற்றையும் நான் மறந்து விடவே முயற்சித்துக் கொண்டிருக்கிறேன். ஏன் என்றால் சுதந்திரத்தின் அர்த்தம் உயிருடன் வாழ வேண்டியது என்ற முடிவுக்கு வந்துள்ளேன்.

மனிதர்: நோ. நோ... நோ பொலிடிகல் டாக்ஸ்— டெல் மீ வாட் ஈஸ் சிவிலிசேஷன்.

ஜோஷி: ஒரு மனிதன் எத்தனை அவமதிப்புகளைத் தாங்குகிறானோ அதிலிருந்து அந்த அளவு நாகரீகம் உருவாகிறது. மேலும் இவ்வாறு தொடர்ந்து அவமானப்பட்டுக் கொண்டே இருப்பதும் அவசியம். ஏன் என்றால் உயிர் வாழ வேண்டியது நிர்பந்தமாகி விடுகிறது.

மனிதர்: நீ ஒவ்வொரு பிரச்சினையையும் விஷயத்தையும் அரசியல் ரீதியாக சிந்திக்க முற்படுகிறாய். 'மெடிக்கல் செக் அப்' நடந்ததா?

ஜோஷி: உங்களுக்கா?

மனிதர்: கேள்வி உன்னிடம் கேட்கப்படுகிறது.

ஜோஷி: உண்மையில் உங்களுடைய ஆரோக்கியத்துடன்தான் எனது ஆரோக்கியம் இணைந்துள்ளது.

(மௌனம்)

மனிதர்: உன் அப்பா உன்னைப் பற்றி எனக்கு எழுதியுள்ளார். உனக்குத் தெரியாது என்று நினைக்கிறேன். நாங்களிருவரும் கிளாஸ்மேட். நான் உனக்கு இந்த வேலையைத் தர விரும்புகிறேன். வேலையின்மைதான் எல்லாவிதமான சிரமங்களின் ஆணிவேர். வேலையில்லாமல் ஒருவன் எதுவரை எத்தனை காலம் அமைதியாக இருக்க முடியும்?

ஜோஷி: எனக்கு அமைதி பிடிக்கிறது. இந்தப் பெயருடைய பெண் யாரேனும் கிடைத்தால் நிச்சயமாய் அவளை...

மனிதர்: இதற்கு முதலில் வேலையில் அமரவேண்டியது அவசியம். அதிருக்கட்டும். நீ எதிற்காக வேலை வேண்டுமென்கிறாய்?

ஜோஷி: அதுவும் ரத்தத்தில் ஊறியுள்ளது போலும். அதாவது "வேலை". எஸ்டாபிலிஷ்மெண்ட். அதாவது சமுதாய அமைப்பின் ஒரு அங்கமாகி விடுவது, கொஞ்ச நாட்கள் வரை, அதாவது ரத்தத்தின் உஷ்ணம் அடங்காதவரை அதே எஸ்டாபிலிஷ்மெண்டை எதிர்ப்பது—இந்திய சினிமாக்களில் வருகிறதே—அதேபோல்...

அதிகாரி: நீ மிக புத்திசாலி.

ஜோஷி: அதுதானே என்னை விடமாட்டேன் என்கிறது.

அதிகாரி: இந்தா—இந்த 'பாண்டை' படித்துவிட்டு கையெழுத்துப் போட்டு விடு...அரே! ரே—முதலில் படியப்பா!

ஜோஷி: எனக்குத் தெரியும்—நீங்கள் என் அப்பாவின் நண்பர்.
(அவர் புன்முறுவல் செய்கிறார். ஜோஷி சிரிக்கிறான்)

அதிகாரி: போதும் சிரிப்பு! நிறுத்து! நான் உத்தரவிடுகிறேன். சிரிப்பை நிறுத்து! ஏய்! சப்பாணி! இந்த ஆளை வெளியே அனுப்பு.
(விளக்கு அணைகிறது)
(சில நிமிடங்களுக்கு பின் மீண்டும் ஒளி பரவுகிறது. அனில் தன் அப்பாவின் முன்னே நிற்கிறான்)

அனில்: அப்பா! ஏன் வந்திருக்கிறீர்கள்!

அப்பா: அச்சா! உன் விஷயமாகத்தான்.
(இருவரும் நடக்கிறார்கள்)

அப்பா: கோகு! நான் உன்னிடம் ஒரு விஷயம் சொல்ல வந்திருக்கிறேன். உலகத்தில் எல்லாவிதமான காரியமும் செய்யலாம். தன்னைக் காப்பாற்றிக் கொண்டு செய்யலாம். நான் உன்னைத் தடுக்கவில்லை. குழந்தாய் நீ இந்த காரியம் செய்யாதே, இதைச் செய் என்று நான் சொல்லவில்லை. நீ சுதந்திரமானவன். இல்லாவிட்டால் சுதந்திர பாரதத்தின் இமேஜ் எப்படி உருவாகும்! நீ சுதந்திரமானவன்.

ஜோஷி: நீங்கள்......

அப்பா: அரே! எங்களைப் பற்றிய பேச்சை விடு. இதையெல்லாம் பற்றிச் சிந்திக்க ஏது அவகாசம்? சோகன் அமெரிக்காவிலேயே திருமணம் செய்து கொண்டு அங்கேயே செட்டிலாகிவிட்டான். மோனியின் கணவன் டூர்கோலாவில் சீஃப் என்ஜினியராகிவிட்டான். சோகாவிற்கு ஒரு சிறு தொழில் ஆரம்பித்துக் கொடுத்தாகிவிட்டது. ஹாவ்டாவில் அவனுக்கு ஒரு பங்களா கட்டியாகிவிட்டது. நான் ரிடையராகும்போது பி.எஃப். பணம்

இரண்டரை, மூன்று லட்சம் கிடைக்கும். சீஃப் மினிஸ்டர் என்னுடை சிஷ்யன்! மாணவன்.

அனில்: அப்பா—நீங்கள் என்னிடம் ஏதோ முக்கியமான விஷயம் சொல்ல வேண்டும் என்று...

அப்பா: ஆமாம், ஆமாம்...பிரமோஷன், முன்னேற்றம், வளர்ச்சி இவற்றின் ரகசியம் என்ன என்பது பற்றிய கதைதான். ஒரு பொழுதும் எதையும் 'கமிட்' செய்து கொள்ளாதே. செயலற்று முனைந்து செயல்படு. ஆனால் 'கமிட்' செய்து கொள்ளாதே. உன்னுடைய தோழன்—அந்த பரிமள சட்டர்ஜி இருந்தானே!வர்த்தமானில் போலீசாரோடு மோதல் ஏற்பட்டதே! ஆமாம், அவனேதான். இப்பொழுது அவன் மிக முக்கியமான, இம்பார் டெண்ட் பர்சன் ஆகிவிட்டான். ஒரு கால் ரைட், மற்றொரு கால் லெப்ட் ஒரு கை ரைட், மற்றொன்று லெப்ட்...இரண்டும் ஒன்றாகவே செயல்படு கிறது. கூடவே நடக்கிறது. நீ செயல்படுகிறாயா! ஏதேனும் செய்கிறாயா என்பது அல்ல கேள்வி. நீ எங்கே போகிறாய்—எந்த திசையில் என்ன செய்கிறாய் என்பதுதான் முக்கியம். அதாவது, ஆர்டினேஷன், ஸ்டேடு காண்டாக்ட் அவ்வளவுதான்.

அனில்: நீங்கள் என்னிடம் ஏதோ சொல்லவேண்டுமென்று...

அப்பா: அனில் ..தி சீக்ரேட் ஈஸ்...எப்படி எதை உபயோகப்படுத்திக் கொள்ள வேண்டும் என்பதுதான். அது பலாத்காரமாக இருந்தாலும் சரி அகிம்சை வழியாக இருந்தாலும் சரி. துக்கமானாலும், துன்பமானாலும், ஏழ்மை யானாலும், மக்கள் படும் துன்பமானாலும் சரி. பயன்படுத்திக் கொள்ளத் தெரிந்திருக்க வேண்டும்.

அனில்: அப்பா! ப்ளீஸ் கிவ் மீ ஏ சிகெரெட்!

அப்பா: அனில்—சிகரெட் ரொம்பக் கெடுதலானது. இங்கேயிருந்து கிளம்பி என்னுடன் வந்துவிடு. எல்லாம் சரியாகிவிடும் என்று சொல்லுகிறேன் வயதான நாங்கள் இன்னும் எத்தனை காலம் இருக்கப் போகிறோம். யூ ஆர் தி ஃப்யூசர். நீங்கள்தான் எங்களுடைய கனவுகள். டீரிம்.

(அனில் அப்பாவின் பையை சடாரென்று பிடுங்கிக் கொள்கிறான் அதிலுள்ள பொருள்களை பரபரவென்று ஆராய்கின்றான். அதிலி ருந்து சிகரெட்டையும் தீப்பெட்டியையும் எடுக்கிறான். பற்றவைத்துக் கொள்கிறான்.

அப்பா: அனில்! நீயும் ஏதாவது பேசு! என்னோடு டிஸ்கஸ் செய்! என்னை எதிர்த்து வாதாடு, என் வாழ்க்கையில் முரண்பாடு ஏதுமில்லை. ஆனால் உன் வாழ்க்கையில் அது உள்ளதே! நான் வெளிப்படையாகப் பேசுகிறேன்

என்பதை முழுவதுமாக நம்பு. தி சயில்ட் இஸ் தி ஃபாதர் ஆஃப் தி மான். (The child is the father of the man)

(அனில் சிகரெட்டின் புகைமண்டலத்தினிடையே மறைகிறான். அப்பாவின் குரல் மட்டும் ஒலிக்கிறது.)

(இருள்)

(மீண்டும் ஒளிபரவுகிறது. அனிலும் ஜோஷியும் தரையில் படுத்திருக்கின்றனர். வெளியே கூச்சல் கேட்கிறது. அதே கோஷங்கள் அதே கூச்சல் இருவரும் மௌனமாயிருக்கின்றனர். வெளியே கூச்சல் மெதுவாகத் தேய்ந்து அடங்குகிறது. இருவரும் எழுந்து உட்காருகின்றனர். கண் இமையாது ஒருவரையொருவர் பார்த்துக்கொண்டிருக்கின்றனர்.

அனில்: சின்ன வயதில் அப்பாவை என்னவென்று அழைப்பாய்.

ஜோஷி: பாபூ...நீ...

அனில்: பாபா—அந்த நாட்களின் நினைவுகள் ஏதேனும்?

ஜோஷி: அப்பா எப்பொழுதும் சொல்லுவார். அவருடைய குழந்தைப் பருவம் சுதந்திரப் போராட்டம், தேசிய எழுச்சி, தேச பக்தியின் சூழ்நிலையில் கழிந்ததாம். "இந்த வாழ்க்கை நாட்டினுடையது. நாட்டிற்காக நீ உன்னை அர்ப்பணித்து விடு' என்று பாடுவார்.

அனில்: என்னுடைய பாபா கூட.

ஜோஷி: என் குழந்தைப் பருவத்தில் ஒரு விசித்திரமான விஷயத்தை கண்டேன். ஏனோ பாபு சுதந்திரம் பற்றிய தனது கருத்துக்கள், எண்ணங்கள், கனவுகள் பற்றி மிகவும் வருந்தினார். அப்பா தனது அரசுப்பணியில் பதவி உயர்வு பெற்றுக்கொண்டே மேலே உயர்ந்தார். நானும் பெரியவனாகிக் கொண்டிருந்தேன். நாட்டின் அரசியல் தலைவர்கள், சுதந்திரம் பற்றிய கனவுகளையும் கற்பனைகளையும் சற்றும் இரக்கமின்றி தகர்த்துக்கொண்டே இருந்தனர். நான் பெரியவனாக ஆக என்னைச் சுற்றிலும் பயங்கரமான நிராசை மேலும் மேலும் கவிந்துகொண்டே போயிற்று.

அனில்: நோ பொலிடிகல் டாக்ஸ். நதிங் டுயிங்.

ஜோஷி: ஆனால் அந்தக் கனவுகள், என் உள்ளும் புறமும் ஏன் பரவிக்கொண்டே இருக்கின்றன?

அனில்: எனக்கு வயதானதும் நான் ஒரு பித்தனாக தெருக்களில் அலைந்துகொண்டிருப்பேன் என்று என் பாபா சொல்லுவார். சுதந்திரம் பற்றிய கனவுகள்தான் என்னுடைய பயித்தியக்காரத்தனமாக இருக்கலாம்.

ஜோஷி : இரண்டாம் முறையாக நான் கல்லூரியைவிட்டு ஓடியதும் அப்பா... "என் பேபி...என் பேபி ஜோஷி .. குண்டர்கள், குற்றவாளிகளிடையே காணாமல் போய்விடுவான்" என்றார்.

அனில்: அனில் ஆன்டி சோஷல் ஆகிவிடுவான்.
(மீண்டும் பழைய கூச்சல் கேட்கிறது.)

ஜோஷி : கேள். கேள்—இந்தக் கூட்டத்தில் நான் அப்பாவைப் பார்க்கிறேன். இதையும் கேள்—இதோ பாருங்கள். அப்பா! நாட்டின் சுதந்திரம் பற்றிய உங்கள் கனவுகள்தான் என்னுடைய பிடிவாதம். கொள்கைப்பற்று. அந்தக் கற்பனைதான் எங்களை பித்தர்களாக்கி இருக்கிறது.

அனில்: பாபா ! நீ... நீதா...பாபா...
(தோல்கள்...குப்பைகள் வீசப்படுகின்றன)

ஜோஷி: அடியுங்கள், இன்னும் அடியுங்கள்.

அனில் : நாங்கள் கனவுகள்—எங்களை யாரும் அழிக்கமுடியாது.

ஜோஷி: நீங்கள் எப்படி இருக்கவேண்டுமென ஆசைப்பட்டீர்களோ...அக் கனவுகள்—கற்பனைகள்தான் நாங்கள்.

அனில் : எதற்காக வசைமாறி பொழிகிறீர்கள்?

ஜோஷி: அர்த்தமற்ற கேள்விகளை ஏன் கேட்கிறீர்கள்?

அனில் : நாங்கள் உங்களைப் பார்க்கிறோம்.

ஜோஷி: உங்களை அடையாளம் கண்டு கொண்டிருக்கிறோம். உணர்ந்து கொண்டிருக்கிறோம்.

அனில் : ஆம்—ஆம்— எங்களுடைய முகவிலாசம், அறிமுகம், அடையாளம் எதுவுமில்லை.

(வெளியே கூச்சல் மெதுவாக தேய்ந்து அடங்குகிறது. ஜோஷியும், அதிலும் மௌனமாய் பார்த்துக் கொண்டு நிற்கின்றனர்.) □

நாடகம்

# சாட்சியின்மையைத் தோண்டியெடுத்தல்

—நிஜந்தன்—

முக்கிய பாத்திரங்கள்:

கிழவி
ஆண்
நோயாளி (ஆண்)
காவல்காரன்—1
காவல்காரன்—2
கிழவர்
நடுத்தரவயதானவன் (அதிகாரி)
இளம்பெண்
இளைஞன்
சிறுவன்
சிறுமி.

துணைப் பாத்திரங்கள்:

சூழலில் நடந்து செல்கிற ஆண்கள், பெண், குழந்தை. நோயாளியைத் துரத்துகிற இரு ஆண்கள். இவர்களுக்கு வசனம் இல்லை.

சூழல் :

ஒரு சாலை. நடைபாதை (Platform), நடைபாதைய்ய ஒட்டியுள்ள கடைகள் (Shutter கொண்டு) மூடப்பட்டுள்ளன.
மேடையின் முன் பகுதியில் இடதுபுற மூலையில் நடைபாதையின் எதிர்புறம் ஒரு குப்பைத் தொட்டி உள்ளது. அதில் ஏராளமான இலைகள் கிடக்கின்றன.

## அங்கம்—1

(மேடையில் ஒளி அதிகரிக்கிறது.

நடைபாதை. அதை ஒட்டியுள்ள கடைகள் (Shutter கொண்டு) மூடப்பட்டுள்ளன. நடைபாதையின் முன் ஓரத்தில் கிழவி குத்துக்காலிட்டு அமர்ந்திருக்கிறாள். அழுக்கடைந்த, கந்தலான, ஏராளமான துணிகளைச் சுற்றிக் கொண்டிருக்கிறாள் அவள். பரட்டைத் தலையுடனும், பரபரப்பான பாவம் கொண்ட விழிகளுடனும் தனக்குள் ஏதோ முணுமுணுத்துக் கொண்டும் இருக்கும் அவள், ஒரு பைத்தியக்காரியோ என்ற சந்தேகத்தைத் தருகிறாள்.

மேடையின் முன்பகுதியில் இடதுபுற மூலையில், நடைபாதையின் எதிர் புறம் குப்பைத்தொட்டி உள்ளது. அதில் ஏராளமான இலைகள் கிடக்கின்றன.

மேடையில் ஒளி அதிகரிக்கும்போது, சாலையில் செல்லும் மோட்டார் வாகனங்களின் ஓட்ட ஒலியும், ஹாரன் (Horn) ஒலியும் பின்னணியில் கேட்கின்றன. சுமார் ஒரு நிமிடம் இந்த ஒலிகள் கேட்டு மெல்ல அடங்குகின்றன. அமைதி நிலவுகிறது. கிழவி அங்கும் இங்கும் பரபரப்பாய் பார்த்தபடி இருக்கிறாள். மேடையின் வலப்புறமிருந்து ஆண் வருகிறான். சுமார் முப்பது வயது தோற்றம் தரும் அவன் மிக சாதாரண—விலை குறைந்த அல்லது பழையதான உடை அணிந்திருக்கிறான். அவன் மேடையின் முன்பக்கம் வந்து நின்று கவனிக்கிறான். மேடையின் இடது பக்கம் சென்று நிற்கிறான். தன் முண்டாசை (அல்லது தொப்பியை) கழற்றிக் கொள்கிறான்.)

ஆண்: (உரத்து, பொதுவாக) பெங்களூர், மைசூர், திருச்சி, மதுரை, திருவனந்தபுரம், ஹைதராபாத்,...பஸ் ரெடி...பஸ் ரெடி...எல்லா ஊர்களுக்கும் பஸ் ரெடி...

(இரண்டு ஆண்கள் மேடையின் இடதுபுறத்திலிருந்து வருகிறார்கள். அவர்களை அணுகுகிறான் ஆண்.)

ஆண்: சார் பெங்களூரா, மைசூரா...பஸ் ரெடி சார்...நடுவில் எங்கேயும் நிறுத்தமில்லை சார்...

(வந்த இரண்டு ஆண்களும் அவனைப் பார்த்து இலேசாய்புன்னகைத்து 'இல்லை' என்பதுபோல தலையாட்டிவிட்டு மேடையின் வலதுபுறமாக சென்று மறைகிறார்கள். அவர்கள் சென்ற திசையைப் பார்த்தபடி நிற்கிறான் ஆண். மேடையின் வலப்புறமிருந்து ஓர் ஆணும் ஒரு பெண்ணும், அவர்களைப் பிடித்தபடி ஒரு குழந்தையும் வருகிறார்கள். அவர்களிடம் வேகமாகச் செல்கிறான் ஆண். அவர்களுடன் நடக்கிறான்)

ஆண்: (வந்த ஆணிடம்) சார் மதுரையா, திருச்சியா...நேர் பஸ் உண்டு... வாருங்கள்...

(பெண்ணோடும் குழந்தையோடும் வந்த ஆண் தொந்தரவு அடைந்த பாவனையோடு 'இல்லை' என்ற வகையில் தலையாட்டிவிட்டு, தன்னுடன் வந்தவர்களோடு, மேடையின் இடதுபுறமாக வெளியேறுகிறான். அவர்கள் மூவரும் சென்ற திசையைப் பார்த்தபடியே நிற்கிறான் ஆண். அவன் சோர்வாய் தலையாட்டிக் கொள்கிறான்.)

ஆண்: (மிக உரத்த குரலில்) எங்கு போகவேண்டும் உங்களுக்கு?...மதுரை, கோவை, திருச்சி, திருவனந்தபுரம், மைசூர், ஹைதராபாத், பெங்களூர்... உடனே பஸ் இருக்கிறது... உடனே பஸ்...சொகுசான பயணம்...

மான பயணம்...(மெல்ல அவன் குரல் குறைகிறது. மிகக் குறைந்த குரலில்) வேகமான பயணம்...(குரல் தேய்ந்து) வேகமான பயணம் (ஆண் மெல்லத் திரும்பி தளர்வாய் நடக்கிறான். நடைபாதையின் மற்றொரு ஓரத்தில், கிழவிக்கு சற்றுத் தள்ளி அவன் அமர்கிறான். தனக்குள்) இன்று ஏன் கூட்டமே இல்லை?

கிழவி: (தானாகவே) எல்லையற்றது வானம். எல்லையற்றது. (சற்றுக் கழித்து) பயணம் போவது எப்படி?

ஆண்: (கிழவியை எரிச்சலுடன் பார்த்து) ஏய் கிழவி பேசாமல் இரு. (சற்றுக் கழித்து) நானே தொல்லையுற்றிருக்கிறேன்.

கிழவி: (ஆணின் இருப்பாலோ பேச்சாலோ பாதிக்கப்படாதவளாய்) ஆனாலும் முயலத்தான் வேண்டும். (சிரிக்கிறாள்) இல்லாவிட்டால் உலகம் சுழலுமா?...

ஆண்: (கிழவியை நோக்கி) பேசாமல் இரு கிழவி. (தனக்குள்) பைத்தியம்... உளறுகிறது...

கிழவி: (தானாகவே) இல்லை, இரவும் பகலும் வருமா?

ஆண்: (கோபமாக எழுந்து வந்து, கிழவியின் அருகில் நின்று ஆக்ரோஷமாக) பேசாதே என்றால் பேசாதே.

கிழவி: (ஆணைப் பார்த்துச் சிரிக்கிறாள். மெதுவாக) வருவதும் போவதும்... வாழ்வதும் சாவதும்...

ஆண்: (வாய் மீது விரல் வைத்து) உஷ் பேசாதே...(மிரட்டுகிற பாவனையில்) இனி நீ பேசினால் ஒரு கொலை விழும் இங்கு.

(ஆண் மெல்ல நடந்து சென்று நடைபாதையின் மற்றொரு ஓரத்தில் அமர்ந்து கொள்கிறான்.)

கிழவி: (சில வினாடிகள் கழித்து தனக்குள் கேள்வி எழுப்பும் பாவனையோடு மெதுவாக) ஒரு கொலை விழும்!

ஆண்: (கிழவியைப் பார்த்து 'ஆம்' என்பது போல) ம்.

கிழவி: (ஆணிடம்) நிச்சயமாகவா? (எழுந்து மெல்ல தள்ளாடி நடந்து ஆண் அருகே சென்று நின்று) நிச்சயமாகத்தானா?

ஆண்: (குனிந்துகொண்டு) ம், நிச்சயமாகத்தான்.

கிழவி: (மெல்லத் தள்ளாடி நடந்து, மேடையின் முன்பகுதி அருகே வந்து நின்று) அதற்குப் பிறகு...(ஆணை நோக்கித் திரும்பி) பயணிகள் வந்து விடுவார்களோ?...

ஆண்: (சற்றுக் கழித்து, கிழவியிடம், சோர்வாய்) என் ஒருவரையும் காண வில்லை?

கிழவி: (ஆணிடம்) மனிதர்கள்? (முதலில் அமர்ந்திருந்த இடத்திற்கு அருகே சென்று நிற்கிறாள்) மனிதர்கள்—நடமாடிக் கொண்டுதானே இருக்கிறார்கள்?

ஆண்: (அழுத்தமாக, கிழவியிடம்) நான் பயணிகளைக் கேட்கின்றேன்.

கிழவி: (ஆணிடம்) பயணிகள்? (மெல்ல சிரமத்துடன் அமர்ந்தபடி) பயணிகள் எல்லோரும் போய்விட்டிருப்பார்கள்.

ஆண்: (அதிர்ந்து, கிழவியிடம்) என்ன?

கிழவி: (நன்றாக அமர்ந்துகொண்டு ஆணிடம்) போய்விட்டிருப்பார்கள் என்றேன்.

ஆண்: (எரிச்சலுடன் கிழவியிடம்) உளறாதே.

கிழவி: (எரிச்சலுடன் ஆணிடம்) யார் உளறுகிறார்கள்? ம்? (பலமாய் சிரிக்கிறாள். சிரிப்பை நிறுத்துகிறாள். தனக்குள்) அல்லது போனவர்கள் திரும்பியிருக்க மாட்டார்கள். (சிரிக்கிறாள். சிரித்தபடியே) போவதேயில்லையென்று முடிவு செய்திருப்பார்கள்...

ஆண்: (வேகமாக, கிழவியிடம்) சரி போதும் நிறுத்து. (சற்றுக் கழித்து, மெல்ல தனக்குள்) பயணம் செய்பவர்களும் வரவில்லை. பயணிகளாய் வந்திறங்குபவர்களை வரவேற்பவர்களும் வரவில்லை. (சற்றுக் கழித்து, கிழவியிடம்) வரவேற்க வருபவர்களும் வரவில்லையே...

கிழவி: (ஆணிடம்) அவர்களும் வருவார்கள்.

ஆண்: (இளக்காரமாய் கிழவியிடம்) வருவார்களா? எனக்குச் சந்தேகமாக இருக்கிறது.

கிழவி; (சோர்வாய், ஆணிடம்) வருவார்கள்.

ஆண்: (கிழவியிடம்) எனக்கு நம்பிக்கையில்லை. (எழுகிறான்.)

கிழவி: (கோபமாய் ஆணிடம்) நான், வரவேற்க வந்தவளாய் தெரியவில்லையா உனக்கு? ம்? (தனக்குள்) நம்பிக்கையில்லையாம்?

ஆண்: (கிழவியின் அருகில் வந்து) நீ வரவேற்பதற்காக வந்திருக்கிறாய! (சிரிக்கிறான். பலமாய் சிரிக்கிறான்.) நல்ல வேடிக்கை, நல்ல வேடிக்கை (இளக்காரமாய்) நீ!

கிழவி: (மென்மையாய் ஆணிடம்) ஆம் வேடிக்கைதான். வேடிக்கைதான்

ஆண்: (வேடிக்கையாக, கிழவியிடம்) யாருடைய வரவை எதிர்பார்த்திருக்கிறீர்கள் அம்மையாரே...

கிழவி: (மெல்ல ஆணிடம்) என் மகனின்...

ஆண்: (கிழவியிடம்) மகனின், மகத்தான வரவையா?

கிழவி; (ஆணிடம், மெல்ல) அனேகமாய்...அவன் உடலை.

ஆண்: (அதிர்ந்து, மெல்ல கிழவியிடம்) உடலை? (அவன் மெல்ல நடந்து சென்று குப்பைத்தொட்டி அருகே நிற்கிறான். மிக மெதுவாக) உடலை... மௌனம். நடந்து சென்று நடைபாதையின் மற்றொரு ஓரத்தில் அமர்ந்து கொள்கிறான். மௌனம். கிழவியிடம் மெதுவாக) என்னவாயிற்று?

கிழவி: (சற்றுக் கழித்து தனக்குள்) இன்னும் கண்டெடுக்கப்படவில்லை. (சற்றுக்கழித்து) அவன் உடல்...(சற்றுக் கழித்து) அனேகமாய்..

ஆண்: (நீண்ட மௌனத்திற்குப் பிறகு, கிழவியிடம் மெதுவாக) எப்படி நிகழ்ந்தது?

கிழவி: (படபடப்புடன், ஆணிடம்] எப்படி நிகழ்ந்தது? ம்? எப்படி நிகழ்ந்திருக்கும்? எப்படி நிகழ்ந்திருக்கும்? ம்? (முகத்தைத் திருப்பிக் கொண்டு) சுட்டு வீழ்த்தியிருப்பார்கள் (சற்றுக் கழித்து) வெட்டிப் போட்டிருப்பார்கள்.. (சற்றுக் கழித்து) தானே உயிரை மாய்த்துக் கொண்டிருப்பான்.

ஆண்: (கிழவியிடம் மெதுவாக) உனக்கே சரியாகத் தெரியாதா?

கிழவி: (எரிச்சலுடன், ஆணிடம்) என்ன தெரிய வேண்டும்? ம்? (முகத்தைத் திருப்பிக்கொண்டு, தனக்குள்) சரியாகத் தெரிதல். (சற்றுக் கழித்து) உயிரோடு இல்லை அவன் என்று புரிகிறது. (ஆணிடம்) உடலைக் கண்டெடுத்தார்களா என்று தான் தெரியவில்லை. (பெருமூச்சு விடுகிறாள். சற்றுக் கழித்து, தனக்குள்) காத்திருக்கிறேன்.

ஆண்: (கிழவியிடம்) வெகு காலமாய்...

கிழவி: (சற்றுக் கழித்து, மெதுவாய் துக்கத்துடன் தனக்குள்) இறந்து போனவனை எரித்துவிட்டுப் பெறும் (சற்றுக் கழித்து) ஆசுவாசத்திற்குக் காத்திருக்கிறேன்.

ஆண்: (கிழவியுடன்) எத்தனை நாட்களுக்கு?

கிழவி: (ஆணிடம்) எத்தனை நாட்களுக்கோ (தனக்குள்) எத்தனை நாட்களுக்கோ...

(நீண்ட அமைதி நிலவுகிறது.

பின்னணியில் நோயாளி முனகும் ஒலி கேட்கிறது. அது மெல்ல அதிகரித்துக் கேட்கிறது. பிறகு நோயாளியின் முனகல் ஒலி சற்றுக் குறைந்து கேட்கிறது.

ஆண் கவனமுறுகிறான். அவன் கிழவியைப் பார்க்கிறான். அவள் பாதிக்கப்படாதவள் போல குனிந்தபடியே தனக்குள் ஏதோ முணுமுணுத்துக் கொண்டிருக்கிறாள். ஆண் எழுந்து கிழவி அருகே வந்து நிற்கிறான்.

ஆண்: (கிழவியிடம் மெல்ல) மீண்டும் நோயாளியின் குரல்...

(கிழவி பாதிக்கப்படாதவளாய் தனக்குள் முணுமுணுத்தபடியே இருக்கிறாள். நோயாளியின் முனகல் தொடர்ந்து கேட்கிறது. அது நோயினுடைய வேதனையின் வேறுபாடுகளை வெளிப்படுத்தும் பொருட்டு மாறிமாறி ஒலிக்கிறது.)

ஆண்: (கிழவியிடம்) ஏய் கிழவி (கிழவி நிமிர்ந்து அவனைப் பார்க்கிறாள்) நோயாளி.

கிழவி: (பார்வையை விலக்கிக்கொண்டு, இளக்காரமாய்) பழைய நோயாளி!

ஆண்: (கிழவியிடம்) மீண்டும் வேதனைப்படுகிறான்.

கிழவி: (தனக்குள்) என்ன ஆச்சர்யம்? (ஆணைப் பார்க்கிறாள்)

ஆண்: (கிழவியிடம்) நோய் தீர்ந்துவிட்டது என்று நினைத்தேன்.

கிழவி: (குனிந்துகொண்டு தனக்குள்) தீராது.

ஆண்: (கிழவியிடம்) ஏன் தீராது? நோயற்றுத் திரிந்தானே அவன்!

கிழவி: (கோபமாய், ஆணிடம்) அவன் திரிந்தால் தீர்ந்துவிடுமா? (அழுத்தமாய் தனக்குள்) தீருமாம். (வேறு பக்கம் திரும்பி) இன்னும் எத்தனை பேர் இருக்கிறார்கள், சாவதற்கு? (தனக்குள்) தீருமாம்.

ஆண்: (விலகிச் சென்று) உன்னுடன் பேசுவது முட்டாள்தனம்.

கிழவி: (தனக்குள்) அதுவும் நோய், சே! கேள்வி கேட்கிறார்கள் கேள்வி!

ஆண்: (கிழவியை நோக்கி) யாரும் மீண்டுவிடக்கூடாதா, உனக்கு?

கிழவி: (தனக்குள்) காலங்கடந்து மீட்டு வந்தால் அடையாளம் தெரியுமா எனக்கு? (ஆணிடம்) யாருக்குத்தான் தெரியும்? (சற்றுக் கழித்து, துக்கத்துடன்) சிதைந்தபின் அடையாளம்தானே பிரச்சினை? (சற்றுக் கழித்து) தீர்ந்தாலும் என்ன, நோய் நோய்தானே...

(பின்னணியில் நோயாளியின் முனகல் நிற்கிறது.)

ஆண்: (குப்பைத்தொட்டி அருகே சென்று) இவன் எப்போது குணம் பெறுவான்?

கிழவி: (தனக்குள்) அந்தக் குப்பைத்தொட்டியில் எத்தனை இலைகள் இருக்கின்றன என்று தெரியவில்லை.

ஆண்: (திரும்பி, கிழவியிடம்) என்ன அது? (உணர்ந்து கொண்டவனாய்) நல்லதாகப் போயிற்று, உன் அறிவு! நான் எப்படி அதைக் கட்டுப்படுத்த இயலும்? (பெருமூச்சு விடுகிறான்.)

கிழவி : (அதிகாரத்துடன், ஆணிடம்) குப்பைத் தொட்டியில் எத்தனை இலைகள் இருக்கின்றன என்று எண்ணிச் சொல்.

ஆண்: (தனக்குள்) நல்ல அதிகாரம். (புன்னகைத்தபடியே, மெதுவாக தலையைக் குனிந்து குப்பைத் தொட்டியில் ஒருமுறை பார்த்து, பிடிப்பற்ற

கிழவியிடம்) ஒரு நூறு இருக்கும். (மீண்டும் குப்பைத் தொட்டியைப் பார்த்து, இறுக்கமாய்) எச்சிலைகள்.

கிழவி: (ஆணிடம்) எச்சிலைகளா? எச்சிலைகளா? ஓர் இலை கூடவா நல்ல இலை இல்லை ம்? யாரும் தொட்டு வைக்காத உணவோடு ஓர் இலை கூடவா இல்லாமல் போய்விடும்? ம்? (அவள் எழுகிறாள். வேகமாய் நடக்க முயன்று குப்பைத் தொட்டி அருகே வருகிறாள். ஆண் நகர்ந்து விலகி நிற்கிறான். அவள் சற்றுக் குனிந்து குப்பைத் தொட்டியில் இலை களைக் கிளறியபடியே) ஓர் இலை கூடவா நல்லதாக இருக்காது? (கிளறு கிறாள்)

ஆண்: (கிழவியை நோக்கி) எச்சிலைகளில் நல்ல இலையா?

கிழவி: (ஆணை வெறுப்பாய் ஒருமுறை பார்த்துவிட்டு மீண்டும் குப்பைத் தொட்டியில் கிளறியபடியே) சுத்தமான இலையை யாருமே போட்டிருக்க மாட்டார்களா? ஒன்றாவது இருக்கும். (கிளறுகிறாள். சற்றுக் கழித்து) கிடைக்கும். (கிளறுகிறாள்) கிடைக்கும் (சற்று நிமிர்ந்து சோர்வாய் பெரு மூச்சு விடுகிறாள். மீண்டும் சற்றுக் குனிந்து கிளறுகிறாள். நிமிர்ந்து சோர்வாய்) அப்பாடா...(திரும்பி மெல்ல நடக்கிறாள். தனக்குள்) கிடைக் கும். நிச்சயம் கிடைக்கும். பிறகு பார்க்கிறேன். (தன் இடத்தில் சென்று அமர்கிறாள். தனக்குள்) எத்தனை இலைகள்?(சற்றுக் கழித்து, தனக்குள்) ஒன்றாவது இருக்கும்...கிடைக்கும்...

ஆண்: (கிழவியிடம், கேலியாய்) கிடைத்தால் எனக்கும் சொல், நிச்சயமாக.

கிழவி: (ஆணிடம்) சூரியனின் கிரணங்களை எண்ண மறந்தவனுக்கு பேச்சும் பொருளும்.

ஆண்: (கிழவியுடம்) மன்னித்துவிடு தாயே. மன்னித்துவிடு! (முகத்தைத் திருப்பிக்கொண்டு) என் மூளை கலங்கிவிடும்!

கிழவி: (சிரித்தபடி, ஆணை நோக்கி) கலங்காது. கலங்காது. நம்பிக்கை வை. நம்பிக்கைதானே எல்லாம்.

ஆண்: (கிழவியைப் பார்த்து) எல்லாம்?

கிழவி: (ஆணிடம்) ஆம். (சற்றுக் கழித்து) மரணம் அல்லவா?

ஆண்: (பொதுவாக, உரக்க) என்னை யாரேனும் காப்பாற்றுங்கள்.

மேடையின் மறைந்த பகுதியிலிருந்து நோயாளியின் குரல்: கவலைப்படாதே நானிருக்கிறேன்.

(ஆணும், கிழவியும் குரல் வந்த, மேடையின் இடதுபுறப் பகுதியைப் பார்க்கிறார்கள். நோயாளி வருகிறான். அவன் தூய ஆடை அணிந் திருக்கிறான். புதுப்பொலிவாய் இருக்கிறான். அவன் ஆணையும், கிழவியையும் பார்த்துப் புன்னகைக்கிறான்.)

ஆண்: அட. நோயாளி.

கிழவி: (ஆணை ஒருமுறை பார்த்துவிட்டு, நோயாளியை நோக்கி) நோயாளியா?

ஆண்: (கிழவியிடம்) ஆம். நம் நோயாளிதான். (நோயாளியை நோக்கி) உன் நோய் எப்படி உள்ளது?

நோயாளி: (ஆணிடம்) நோய்? (நம்பிக்கையோடு சிரிக்கிறான்.) எனக்கு ஏது நோய்?

கிழவி: (எழுந்து நோயாளியின் அருகில் வந்து, அவனிடம்) உன் நோய் என்ன ஆயிற்று?

நோயாளி: (கிழவியிடம்) நோய். பறந்துவிட்டது.

கிழவி: (தன் இடம் நோக்கி நகர்ந்தபடி) கொஞ்சமும் மிச்சமில்லையா?

நோயாளி: இல்லை.

கிழவி: (தன் இடத்திற்குச் சென்று அமர்ந்தபடி) மற்றவர்களுக்காகவும் மிச்சமில்லையா? (சற்றுக்கழித்து) மற்றவர்களிடமும் மிச்சமில்லையா?

ஆண்: (சற்றுக் கழித்து, பொதுவாக) சற்றுமுன் நோயால் முனகியது யார்? (நோயாளியிடம்) யார்?

நோயாளி: (ஆணிடம்) எனக்கு என்ன தெரியும்? எனக்கு நோய் தீர்ந்து வெகு காலம் ஆகிவிட்டது.

(பின்னணியில் ஒரு நோயாளி ஆண் முனகும் ஒலி கேட்கிறது.
கிழவி, ஆண், நோயாளி—கவனமுறுகிறார்கள்)

கிழவி: (பொதுவாக) மீண்டும் நோயாளின் முனகல்.

ஆண்: (நோயாளியிடம்) யாராக இருப்பார்கள்?

நோயாளி: (பரபரப்புடன்) யார்? எனக்குத் தெரியவில்லையே.

கிழவி: (ஆணிடமும், நோயாளியிடமும்) எதற்குக் குழப்பம்? என்ன பஞ்சம் உலகில்—நோயாளிகளுக்கு...

நோயாளி: (மெல்ல நடந்து, முன் பகுதிக்கு வந்து, சலிப்புடன்) மீண்டும் (சற்றுக் கழித்து) நோயாளி.

(பின்னணியில் நோயாளி ஆணின் முனகல் நிற்கிறது.
அமைதி நிலவுகிறது.
மேடையின் வலது பகுதியிலிருந்து வேகமாக இருவர் ஓடி வருகிறார்கள். அவர்கள், கைகளில் கத்திகளை வைத்திருக்கிறார்கள். ஒருவரையொருவர் தாக்கிக்கொள்ளும் மூர்க்கத்துடன் ஒருவரையொருவர் துரத்திக்கொண்டு, மேடையில் வட்டமிட்டும் வளைந்தும் ஓடியபடி இருக்கிறார்கள். வெறியோடு கத்தியபடியும் இருக்கிறார்கள்

'விடாதே', 'விடமாட்டேன்', 'வெட்டு', 'வீழ்த்து', 'குத்திக் கொலை செய்வேன்', 'அழித்துவிடுவேன்', 'உயிரைக் குடிப்பேன்', என்று கத்தியபடி ஓடுகிறார்கள். ஒருவரையொருவர் துரத்திக்கொண்டு ஓடிய வர்கள், நோயாளியை நோக்கி வருகிறார்கள். நோயாளியும் ஓடத் துவங்குகிறான். வந்த இருவரும் நோயாளியைத் துரத்துகிறார்கள். நோயாளி ஓடுகிறான். நோயாளி திரும்பித் துரத்துகிறான். அவ னுடன், வந்தவர்களில் ஒருவனும் சேர்ந்துகொள்ள இருவரும் மற்ற வனைத் துரத்துகிறார்கள். துரத்தப்படுபவன் திரும்பி நின்று துரத்து கிறான். அவனுடன் நோயாளி சேர்ந்துகொள்ள மற்றவன் ஓடுகிறான். ஒருவரையொருவர் துரத்திக்கொண்டே மேடையின் இடதுபுறம் சென்று மறைகிறார்கள். ஒருவரையொருவர் தாக்கிக்கொள்ளும் ஒலியும், அதனால் அவர்கள் 'ஹா', 'அம்மா' என்று கதறும் ஒலியும் கேட்கின்றன. ஓர் ஆணின் ஓலம் உயர்ந்து கேட்டு மெல்ல அடங்கு கிறது.

அமைதி நிலவுகிறது)

ஆண்: (மெல்ல தனக்குள்) அப்பாடா, என்ன சண்டை! (கிழவியிடம்) ஏன் தான் இப்படி சண்டை போட்டுக்கொள்கிறார்களோ?

கிழவி: (சற்றுக் கழித்து, அழத் துவங்கி, அழுதபடியே தனக்குள்) இப்படி யான ஒரு சண்டையின்போதுதானே...(விசும்பியபடி) என் மகனும் என்னைப் பிரிந்தான்...(விசும்புகிறாள்)

ஆண்: (கிழவியிடம்) அழாதே. (கிழவி அழுவதை நிறுத்திக் கொள்கிறாள்.) சண்டைதான் காரணமா?

கிழவி: (ஆணிடம், துக்கத்துடன்) சண்டைதான். வேறு என்னவாக இருக்கும்? (குனிந்து கொள்கிறாள்)

ஆண்: (சற்றுக் கழித்து, தனக்குள்) சண்டை — (சற்றுக்கழித்து) இந்தச் சண்டையால்தான் எவ்வளவு இழப்பு, எல்லோருக்கும். (சற்றுக் கழித்து) இதனால் இந்தக் கடைகள் வேறு மூடிக்கிடக்கின்றன. (பின்னே மூடிய கடைகளைக் காட்டுகிறான். கிழவியிடம்) உனக்கும் எவ்வளவு தொல்லை.

கிழவி: (ஆணைப் பார்த்து) என்ன?

ஆண்: (கிழவியிடம்) இந்தக் கடைகள் மூடிக்கிடப்பதால், உனக்கு எவ்வளவு சிரமம்.

கிழவி: (ஆணிடம்) எனக்கு என்ன?

ஆண்: (கிழவியிடம்) உனக்கு உணவுக்கு சிரமம் ஆகிவிட்டதே. (பின்னே கைகாட்டி) இந்த மளிகைக் கடையும், வெற்றிலை பாக்குக் கடையும் இருந்தால் உனக்கு உண்ண ஏதாவது கிடைக்கும். (கிழவி அவனையே உற்றுப் பார்க்கிறாள்) உனக்குப் பசி வரும்போது அவர்களின் கடை

முன்னால் நீ போய் நிற்கும்போது உனக்கு அவர்கள் பன்னும் பழமு தருவார்கள். நீ கேட்காதபோதும் உனக்கு வேர்க்கடலையும், மிட்டாயு தருவார்கள் அவர்கள். இல்லையா?

கிழவி: (கோபமாய், ஆணிடம்) நிறுத்து உன் பேச்சை! மற்றவரிடம் கேட் வாங்கிச் சாப்பிடுகிறவளா நான் ம்?

ஆண்: (கிழவியிடம்) பின்னே, அவர்களிடம் நீ கேட்டு வாங்கிச் சாப்பிட் தில்லையா?

கிழவி: (கோபமாய், ஆணிடம்) நாக்கை அடக்கு. நான் என்ன பிச்சை காரியா? பிச்சை எடுத்து உண்கிறவளா? ம்? பட்டினி கிடந்தாலும் கிட பேனே தவிர, பிச்சை எடுக்கமாட்டேன். யார் கொடுக்கிற பொருளையு தொடமாட்டேன்.

ஆண்: (இளக்காரமாய் கிழவியிடம்) இந்தப் பேச்சில் ஒன்றும் குறைவில்லை

கிழவி: (ஆணிடம்) அந்தக் குப்பைத் தொட்டியில் கிடக்கும் இலைகளி இருக்கிற உணவைத் தின்பேன் தவிர, மற்றவர்கள் கொடுப்பதை தொடமாட்டேன்.

ஆண்: (எள்ளியபடி) எச்சிலைகள்?

கிழவி: (தனக்குள்) ஓர் இலைகூட நல்லதாய் இருக்காதா, என் (எழுகிறாள்)

(காவல் விசில் ஒலி கேட்கிறது. மேடையின் இடதுபுறமிருந்து இரண் காவல்காரர்கள் (Policemen) வேகமாக வருகிறார்கள். ஆண் எழுந் நிற்கிறான். காவல்காரர்கள், ஆண், கிழவி அருகே சென் நிற்கிறார்கள்.)

காவல்காரன் 1: (ஆண், கிழவி—இருவரிடமும்) சற்று முன்பு என்ன நடந் இங்கு? ஒரே சப்தம்? சண்டை ஏற்பட்டதா? அடிதடி நிகழ்ந் சொல்லுங்கள்.

காவல்காரன் 2: (ஆண், கிழவி—இருவரிடமும்) சொல்லுங்கள். சொல் கள். என்ன ஆயிற்று? கொலையே நடந்துவிட்டதா? ஓலம் கேட்ட பிணம் விழுந்ததா? சொல்லுங்கள்.

காவல்காரன் 1: சொல்லுங்கள்.

கிழவி: (காவல்காரர்களிடம்) சொல்லுங்கள். சொல்லுங்கள். பிண கிடைத்ததா? (சிரிக்கிறாள்)என் மகனின் பிணம்கிடைத்ததா? (சிரிக் கிடைத்ததா? (சிரித்தபடி அழுகிறாள்).

காவல்காரன் 2: ஏய் கிழவி என்ன உளறுகிறாய்?

ஆண்: (காவல்காரர்களிடம்) அது பைத்தியம். மீட்கப்படாத அவ மகனுடைய பிணத்தின் நினைவாகவே இருக்கிறாள்.

காவல்காரன் 1: (பொதுவாக) எல்லோர் முன் விழும் பிணங்களையே காண முடிவதில்லை. புதைந்து போன பிணம் பற்றி என்ன கவலை? (கிழவியிடம்) பொறுமையாக இரு கிழவி. எங்கள் அதிகாரி வருவார். மீட்கப்படும் பிணங்களைப் பற்றிய தகவல்களைத் தருவார். கவலைப்படாதே. ஆனால் இங்கு சற்றுமுன் என்ன நடந்தது என்று மட்டும் சொல்.

கிழவி: (பொதுவாக) துரத்தலும் ஓட்டமும், தொலையும் பிணமும் தொலையாத நினைவுகளும்...

காவல்காரன்-2: பைத்தியம்.

கிழவி: (பொதுவாக) உனக்கு மட்டும் என்ன? பிணம் தேடும் பணிதானே. (மெல்ல, தன் இடத்தில் அமர்ந்துகொள்கிறாள்.)

காவல்காரன்-1: (ஆணிடம்) நீயாவது சொல். என்ன ஆயிற்று இங்கு.

ஆண்: (காவலர்களிடம்) நோயாளி, மற்றும் இருவர் ஒருவரையொருவர் துரத்திக்கொண்டார்கள். (மேடையின் இடதுபுறத்தைக் காட்டி) இவ்வழியே ஓடினார்கள். மரண ஓலம் கேட்டது. அவ்வளவுதான் எனக்குத் தெரியும்.

காவல்காரன்-2: (மேடையின் இடதுபுறத்தைக் காட்டி, ஆணிடம்) இந்த வழியாகவா சென்றார்கள்? (காவல்காரன்-1 இடம்) வா, நாம் இவ்வழியே சென்று பார்ப்போம். சீக்கிரம் வா. (ஆணிடம்) உனக்கு நன்றி.

(காவல்காரர்கள் மேடையின் இடதுபுறமாக வேகமாக வெளியேறுகிறார்கள்.

அமைதி நிலவுகிறது.

கிழவி மெல்ல நடந்து வந்து, குப்பைத்தொட்டி அருகே நிற்கிறாள்.)

கிழவி: (மெல்ல) எப்படியும் ஓர் இலையாவது நன்றாக இருக்கும். (குனிந்து குப்பைத் தொட்டியில் தேடுகிறாள், இலைகளைப் புரட்டுகிறாள்) எப்படியும் ஒன்றாவது...

ஆண்: (கிழவியை நோக்கி) பிச்சையெடுத்தது மறந்து போகும்போது எச்சிலை தான் மிஞ்சும் வாழ்வில்.

கிழவி: (நிமிர்ந்து, ஆணைக் கோபமாய் நோக்கி) கேலி பேசுகிறாயா? ம்? கேலி பேசுகிறாயா? விரைவில் நீயும் வந்து இதில் தேடப் போகிறாய் பார், (குனிந்து குப்பைத் தொட்டியில் தேடுகிறாள்) உனக்கும் சேர்த்தே தேடுகிறேன் நான்.

ஆண்: (கிழவியை நோக்கி) எனக்கு இப்போது பசி இல்லை. இருந்தாலும் எச்சிலை தேடும் நிலை வராது எனக்கு.

கிழவி: (இலைகளைக் கிளறியபடியே) நல்ல நம்பிக்கை. நல்ல நம்பிக்கை.

ஆண்: (சற்றுக் கழித்து, கிழவியை நோக்கி) எனவே எச்சிலைதான் மிஞ்சும் என்று தெரிந்துவிட்டது உனக்கு.

கிழவி: (இலைகளைக் கிளறியபடியே) மிஞ்சுமா? மிஞ்சுமா என்று கேட்கிறேன். (நிமிர்ந்து ஆணைப் பார்த்து) இந்தக் குப்பைத் தொட்டியில் ஓர் இலையாவது மிஞ்சுமா?

ஆண்: (கிழவியிடம்) ஏன்?

கிழவி: (ஆணிடம்) நாய்களல்லவா? நாய்கள். (சற்றுக் கழித்து) அதுவும் அகோரப் பசியோடு. (எங்கோ பார்த்து) மிச்சம் வைக்காது.

ஆண்: (தலையிலடித்துக் கொண்டு, நகர்ந்தபடி) உன் அறிவு...நான் எப்படித் தப்பிப்பது?

(ஆண் தன் இடத்திற்குச் சென்று அமர்கிறான். அமைதி நிலவுகிறது.

மேடையின் இடதுபுறத்திலிருந்து, மிக பகட்டாக உடையணிந்த (பட்டு வேஷ்டி, ஜிப்பா அல்லது கோட், பேண்ட், டை ஆகியவையோடு) கிழவர் வருகிறார். சில நொடிகள் நிற்கிறார். சாதாரண பாவனையுடன் இருக்கும் அவர், மேடையின் இடப்பகுதிக்கும் வலப்பகுதிக்குமாக மெதுவான நடைபோடுகிறார். ஆண் அருகே வந்து நிற்கிறார்.

கிழவர்: (ஆணிடம்) இங்கு வெகுநேரமாய் இருக்கிறீர்களா?

ஆண்: (சோர்வாய். கிழவரிடம்) ஆம்.

கிழவி: (தனக்குள்) வெகு காலமாய்.

ஆண்: (கிழவரைப் பார்த்து) ஏன் என்ன விஷயம்? நீங்கள் எதற்காக வந்திருக்கிறீர்கள்? நீங்கள் பயணியா?

கிழவர்: (ஆணிடம், அவசரமாக) இல்லை. இல்லை. (சற்றுக் கழித்து, துக்கமான முகத்துடன், கிழவி, ஆண்—இருவரிடமும்) என் மனைவியின் சடலம் கிடைக்குமென்று...

ஆண்: (குறுக்கிட்டு, கிழவரிடம்) தேடலில் வந்தீர்களா?...

கிழவி: (கிழவரிடம்) இன்னும் கண்டெடுக்கப்படவில்லையா? (துக்கத்துடன்) என் மகனின் உடலும் இன்னும் கண்டெடுக்கப்படவில்லை.

கிழவர்: (அவசரமாக, சற்றுப் பெருமித பாவனையில், கிழவி, ஆண்—இருவரிடமும்) என் மனைவியின் உடல் கண்டெடுக்கப்பட்டுவிட்டது ..கண்டெடுக்கப்பட்டுவிட்டது...உயர் அதிகாரி தொலைபேசியில் தெரிவித்துவிட்டார். புகைப்படத்தோடு ஒப்பிட்டுப் பார்த்துவிட்டாராம். அவர் சடலங்களோடு இங்கு வருவதாகக் கூறினார்...அழைத்துச் செல்ல வந்திருக்கிறேன். (சற்றுக் கழித்து, தனக்குள்) எடுத்துச் செல்ல...

ஆண்: (கிழவரிடம்) எப்படி நிகழ்ந்தது சண்டையால்தானா?

கிழவர்: ஆம். சண்டையால்தான். (சற்றுக் கழித்து) சாதாரணமாய் வெளியே போனவள்...சிக்கிக் கொண்டுவிட்டாள்...

(கிழவர் உட்காருவதற்கு இடம் தேடுகிறார். அங்கும் இங்கும் பார்க்கிறார். ஆணைக் கடந்து சென்று, அவனுக்கு சற்றுத்தள்ளி நிற்கிறார். குனிந்து, நடைபாதையில் ஓரிடத்தை ஊதுகிறார். அங்கு மெதுவாக அமர்கிறார்.

அமைதி நிலவுகிறது.

மேடையின் வலதுபுறத்திலிருந்து 'பேண்ட்'டில் 'டக்-கின்' செய்யப்பட்ட சட்டை அணிந்த நடுத்தரவயதானவன் மிடுக்காக நடந்து வருகிறான். சிறிது நேரம் நிற்கிறான். மூடப்பட்டிருக்கும் கடைகளை நோக்கியபடி இருக்கிறான்.)

நடுத்தரவயதானவன்: (மெல்ல தனக்குள்) இங்கும் கடைகள் இல்லையா? (கிழவரின் அருகே சென்று, அவரிடம்) கடைகள் இல்லையா, திறக்குமா?

கிழவர்: (நடுத்தர வயதானவனிடம்) தெரியாது, எனக்கு.

நடுத்தரவயதானவன்; தெரியாதா? (ஆணை அணுகி அவனிடம்) கடையில்லையா எங்கும்?

ஆண்: (நடுத்தர வயதானவனிடம், வெறுப்புடன்) எப்படித் தெரிகிறது? (நடுத்தரவயதானவன் அவமானம் அடைந்தவனாய் முகம் திருப்பிக் கொண்டு மெல்ல நகர்கிறான். ஆண் வெறுப்புடன் தனக்குள்) எல்லாம் சண்டையால்தான்.

நடுத்தரவயதானவன்: (நிற்கிறான். தனக்குள்) சண்டை, சச்சரவு. இதன் பாதிப்புகள். (சற்றுக் கழித்து) பசியும் பட்டினியும்...

கிழவி: (நடுத்தரவயதானவனை நோக்கி) கொலைப் பசி. (தனக்குள்) கொலை. (சற்றுக்கழித்து) பசி.

நடுத்தரவயதானவன்: (கிழவியிடம்) என்ன செய்வது? சற்றுக் கழித்து) பசிதான்.

கிழவி: (நடுத்தரவயதானவனிடம்) உனக்கும்தானா?

நடுத்தரவயதானவன்: (கிழவியிடம்) என் வீட்டில்.

கிழவி: (நடுத்தரவயதானவனிடம்) பாவம்.

நடுத்தரவயதானவன்: (கிழவியிடம்) பாவம்தான். (சற்றுக்கழித்து) என்ன செய்வது?

கிழவி: (நடுத்தரவயதானவனிடம்) எல்லை மீறிவிட்டால் அதோ அந்தக் குப்பைத் தொட்டியில் தேடவேண்டியதுதான்—உணவை. (நடுத்தர

வயதானவன் சிரிக்கிறான். கிழவி கறாராக) சிரிக்காதே. எச்சில்படாத இலை இருக்கக் கூடும்.

ஆண்: (நடுத்தரவயதானவனிடம்) அது பைத்தியம்.

கிழவி: (ஆணிடம்) பசியின் உச்சியில் நீயும் எச்சிலை தேடுவாய். (நடுத்தர வயதானவனிடம்) உனக்கும் சொல்கிறேன்.

நடுத்தரவயதானவன்: (திரும்பி நின்று, பொதுவாக) எச்சிலை உணவு தின்று அதற்குப் பழக்கமில்லை.

ஆண்: (நடுத்தரவயதானவனை நோக்கி) அதற்கு?—எதற்கு?

நடுத்தரவயதானவன்: என் நாய்க்கு,

ஆண்: நாய்?

நடுத்தரவயதானவன்: மிக விலை உயர்ந்த ஜாதி. குட்டியாய் வாங்கும் போதே கொள்ளை விலை.

ஆண்: (நடுத்தரவயதானவனை நோக்கி, தீவிரமாய்) உணவு நாய்க்காகவா?

நடுத்தரவயதானவன்: (ஆணை நோக்கித் திரும்பி, அவனிடம்) ஆம். உணவு என் நாய்க்குத்தான். (சற்றுக் கழித்து) காலையிலிருந்து எதுவுமே சாப்பிட வில்லை அது. (சற்றுக் கழித்து) வீட்டுக்கருகிலும் கடைகள் அடைபட்டுக் கிடக்கின்றன. (சற்றுக் கழித்து) ரொட்டிதான் அதன் பிடித்தமான உணவு. வேறு எங்காவது கிடைக்கிறதா என்று பார்க்கிறேன்.

கிழவி: (தனக்குள்) இறுதியில் குப்பைத் தொட்டியைத் தேடி வருவாய், உன் நாயோடு. (சற்றுக் கழித்து) பசி. (சற்றுக் கழித்து) நாயின் பசி.

(நடுத்தரவயதானவன் மெல்ல மேடையின் இடதுபுறமாக வெளியேறுகிறான். மேடையின் இடதுபுறத்திலிருந்து இளம்பெண் வருகிறாள். அவள் கையில் இரண்டு சிறிய ரோஜா மாலைகள் உள்ளன. அவள் இயல்பாக, கிழவரை அடுத்து, நடைபாதையில் அமர்ந்துகொள்கிறாள். அவள் தலைகுனிந்தபடியே இருக்கிறாள்.

சில விநாடிகள் நகர்கின்றன.

மேடையின் வலதுபுறத்திலிருந்து இளைஞன் வருகிறான். அவன் கையில் ஒரு சிறிய கைப்பெட்டி உள்ளது. அவன் தொலைவில் இருப்பதைத் தேடுவது போன்று, மேடையில் எதையோ தேடியபடி இருக்கிறான். மெல்ல மேடையில் நடைபோடுகிறான்.)

ஆண்: (இளைஞனை நோக்கு) என்ன தேடுகிறாய்?

இளைஞன்: (நின்று ஆணைக் கவனித்து, அவனிடம்) வந்துவிட்டார் என்றார்கள்.

ஆண்: (சோர்வாய்) இன்னும் இல்லை.

இளைஞன்: (அதிர்ந்து) இன்னுமா இல்லை.

இளம்பெண்: (தலையுயர்த்தி இளைஞனைப் பார்க்கிறாள்.) அட நீ. நீயுமா?

இளைஞன்: (இளம்பெண்ணைப் பார்த்து, ஆச்சர்யப்பட்டு) நீ? நானும். நீயும்.

இளம்பெண்: (எழுகிறாள். இளைஞன் அருகே வந்து நின்று அவனிடம்) யார்?

இளைஞன்: (இளம்பெண்ணிடம், வெறுப்பாய்) என் தந்தை. (சற்றுக் கழித்து) உன் விஷயத்தில்...

இளம்பெண்: (மெதுவாக) என் கணவர். (துக்கத்துடன்) என் மூன்று வயது மகளும்.

இளைஞன்: ஓ. சே. (சற்றுக் கழித்து, இளம்பெண்ணிடம்) நாம் சந்தித்து சில நாட்கள்தானே ஆகின்றன? (பெட்டியைக் கீழே வைக்கிறான்.) அதற்குள் அவர்கள்...

இளம்பெண்: (சற்றுக் கழித்து, சற்று நகர்ந்து) ஆம். அதற்குள் அவர்கள்... (இளைஞனை நோக்கித் திரும்பி, சற்றுக் கழித்து) ஆனால் இங்கு வந்து நிற்பது அபத்தமாக இருக்கிறது...

இளைஞன்: (சற்றுக் கழித்து, இளம்பெண்ணிடம்) இப்படி, எங்கு நிற்பதும் அபத்தமானதுதான்...

கிழவர்: (இளைஞனை நோக்கி) எதுவாயினும் வந்த நோக்கம் நிறைவடைய வேண்டும்.

இளம்பெண்: (பொதுவாக) ஆனால் உடல்கள் கிடைக்குமா?

கிழவி: (இளம்பெண்ணை, சில வினாடிகள் உற்றுப் பார்த்துவிட்டு, தலை குனிந்து, தனக்குள்) மாலைகள் வாடும்முன் உடல்கள் கிடைத்துவிட வேண்டும். (இளம்பெண்ணும், இளைஞனும் கிழவியைப் பார்க்கிறார்கள். கிழவி தனக்குள்) இல்லாவிட்டால் மாலைகளைத் தேடிப் போகவேண்டும்.

ஆண்: (கிழவியிடம், கூர்மையாக) கிழவி பேசாமல் இரு. உனக்கென்ன?

கிழவி: (சிரிக்கிறாள், தனக்குள்) எனக்கென்ன? மலர்களா, மாலைகளா! (துக்கத்துடன்) எரிக்கப்படாத மகனைச் சவமாய் நெஞ்சில் சுமக்கும் வேதனை தானே ..

கிழவர்: (வெறுப்புடன் தனக்குள்) எல்லாருக்கும் அந்த வேதனைதான்...

(அமைதி நிலவுகிறது.

இளம்பெண் மெதுவாக நடந்துசென்று, கிழவரை அடுத்து அமர்கிறாள். இளைஞன் பெட்டியை எடுத்துக்கொண்டு மெதுவாக நடந்து சென்று, இளம்பெண்ணை அடுத்து அமர்கிறான்.)

கிழவர்: (பொதுவாக) மாலையாகிவிடும் போலிருக்கிறது.

ஆண்: (கிழவரிடம், தொடர்பற்று) மாலையா?

கிழவி: (தனக்குள்) வேறு என்ன? மாலைகளும் இரவுகளும்.

இளைஞன்: (சற்றுக் கழித்து, இளம் பெண்ணிடம்) எனக்கு சோர்வளிக்கிறது.

இளம்பெண்: (இளைஞனிடம்) என்ன?

இளைஞன்: (இளம் பெண்ணிடம்) வேறு என்ன. இந்த எதிர்பார்ப்புதான்.

இளம்பெண்: (இளைஞனிடம்) அதுவும்...

இளைஞன்: (இளம் பெண்ணிடம்) அதுவும் (சலிப்புடன்) பிணத்திற்காக, (சற்றுக்கழித்து, வெறுப்புடன்) அதுவும் தந்தையின் பிணத்திற்காக (சற்று அதிக நேரம் கழித்து) அந்த மோசமான மனிதர்...

கிழவி: (தனக்குள்) இருந்தாலும் பிணம்...

இளம்பெண்: (சற்றுக் கழித்து, இளைஞனிடம் சோர்வாக) அடையாளம் காணுவதும் எரிப்பதும் (முகம் திருப்பி) அவசியமானதுதான்...(சற்றுக் கழித்து) கடந்த காலத்தை மறந்துவிட்டு (சற்றுக் கழித்து) மறந்து விட்டு...

இளைஞன்: (இளம் பெண்ணை நோக்கி) யாருடைய கடந்த காலத்தை?

இளம்பெண்: (இளைஞனிடம்) அவர்களுடைய (முகம் திருப்பி) உன்னுடைய (சற்றுக் கழித்து) என்னுடைய...(விழிகளை இலேசாய்த் துடைத்துக் கொள்கிறாள்)

இளைஞன்: (இளம்பெண்ணை சற்று நெருங்கி) வேதனையானதுதானா?

இளம்பெண்: (இளைஞனிடம்) வேறு எப்படி?

இளைஞன்: (இளம்பெண்ணிடம்) உன்னைப் புரிந்துகொள்கிறேன்.

இளம்பெண்: (இளைஞனிடம்) கடந்துவிட்டதால்தானா?

இளைஞன்: (இளம் பெண்ணிடம்) காலமா?...

இளம்பெண்: [இளைஞனிடம்] இல்லாவிட்டால் சாத்தியமா? [அவள் தலையைக் குனிந்து கொள்கிறாள்]

கிழவி: [சற்றுக் கழித்து, பொதுவாக] எப்பொழுது வருவார்கள்?

(மேடையின் வலப்புறத்திலிருந்து நடுத்தரவயதானவன் மெல்ல வருகிறான். அவனுடன் காவல்காரன் (Policeman) வருகிறான். அவர்கள் இருவரையும் நடைபாதையில் அமர்ந்திருப்பவர்கள் உற்றுப் பார்க்கிறார்கள். இருவரும் வந்து நிற்கிறார்கள்.)

காவல்காரன்: (பொதுவாக) எல்லோரும் அமைதியாய்க் கேளுங்கள். இந்த அதிகாரி ஒரு முக்கியமான செய்தியைக் கொண்டு வந்திருக்கிறார். நீங்கள் காத்திருக்கிற பிணங்களைப் பற்றியது...

கிழவி: [அதிர்ந்து எழுந்து, படபடப்புடன்] அப்படியா. என் மகனின் உடல் கிடைத்துவிட்டதா? ஏன் கொண்டுவரவில்லை? எங்கு இருக்கிறது?

காவல்காரன்: (கிழவியிடம்) பேசாமல் இரு கிழவி.

(ஆண் எழுகிறான். கிழவர், இளைஞன், இளம்பெண் ஆகியோரும் எழுகிறார்கள்.)

ஆண்: (காவல்காரனிடம், நடுத்தர வயதானவனைக் காட்டி) இவரா அதிகாரி? (நடுத்தரவயதானவனிடம்) நீங்களா?

நடுத்தரவயதானவன்: (கர்வமாய், பொதுவாக) ஆம். நான்தான்.

(இனி நடுத்தரவயதானவன், அதிகாரி என்று அறியப்படுகிறான்)

கிழவர்: (அதிகாரியிடம்) நாய்க்கு உணவு தேடினீர்கள் அல்லவா?

கிழவி: (அதிகாரியிடம்) நாயின் சவத்தைப் பார்க்க விரும்பாதவன் நீ. அதற்கு உணவு தேடி, கிடைத்துவிட்ட பின்பு கடமையாற்ற வந்தாயா?

அதிகாரி: (கிழவியிடம்) சற்றுப் பொறுமையாய் இருங்கள்.

கிழவர்: (அதிகாரியிடம்) உடல்கள் கிடைத்துவிட்டனவா?

கிழவி: (அதிகாரியிடம்) என் மகன்தானா?

அதிகாரி: (பொதுவாக) எல்லோரும் சற்று அமைதியாய் இருங்கள். நான் சொல்ல வந்ததைச் சொல்ல விடுங்கள். எல்லோரும் அமருங்கள். [நடைபாதையில் கிழவி, ஆண், கிழவர், இளம்பெண், இளைஞன் அமர்ந்து கொள்கிறார்கள். அவர்களிடம்] பொறுமையாய்க் கேளுங்கள். எங்கள் பணி மிக சிரமமான பணியாக இருக்கிறது. [சற்றுக் கழித்து] பிணங்கள் மிக ஆழமாக இருக்கின்றன, மண்ணுக்குள். தோண்டத் தோண்ட இன்னும் தோண்ட வேண்டிய அவசியமே ஏற்படுகிறது. நிறையப் பிணங்கள் புதைந்து கிடக்கின்றன என்று புரிகிறது. அவற்றைத் தோண்டியெடுக்க சிறிது காலமாகலாம்.

இளைஞன்: (தனக்குள், சலிப்புடன்) ஏற்கனவே சோர்வாகிவிட்டது.

கிழவி: (அதிகாரியிடம்) இனி எத்தனை காலம் பொறுப்பது?

அதிகாரி: (பொதுவாக) பல காலம் ஆகலாம். எனவே எங்கள் நிர்வாகத்தின் சார்பில் ஒரு யோசனை. பிணங்கள் கிடைக்கும்போது கிடைக்கட்டும். (சற்றுக் கழித்து) ஆனால் அவற்றிற்காக இறுதிப் பிரார்த்தனை செய்வதில் தவறில்லை. (சற்றுக் கழித்து) எனவே, இன்று நீங்கள் எல்லோரும், இறந்துபோன உங்கள் உறவினர்களுக்காக பொதுப் பிரார்த்தனை செய்யுங்கள்.

கிழவர்: (அதிகாரியிடம்) இறந்து போய்விட்டார்கள் என்று நினைக்கப்பட்டவர்கள் ஒருவேளை உயிருடன் இருந்தால்...

அதிகாரி: (பொதுவாக) இறந்து போய்விட்டிருக்கக் கூடும் என்ற அனுமானத்தோடு பிரார்த்தனை செய்யலாம். தவறில்லையே.

இளைஞன்: (அதிகாரியிடம்) பிரார்த்தனையில் நம்பிக்கையில்லை எனக்கு.

இளம்பெண்: (அதிகாரியிடம்) ஆம். உடல் கிடைத்தால் போதும் எரித்துவிட்டுக் கடப்போம். தப்பிப்போம்.

அதிகாரி: (பொதுவாக) பிணம் கிடைக்காமலே போய்விட்டால் என்ன செய்வது? எனவேதான் பிரார்த்தனை.

ஆண்: (அதிகாரியிடம்) எனவே இறந்து போகாதவர்களுக்கும் சேர்த்து பிரார்த்தனையா?

அதிகாரி: (பொதுவாக) இறந்து போகப் போகிறவர்களுக்குமான பிரார்த்தனையாய் இருக்கட்டுமே, இது.

கிழவி: [பொதுவாக] பலகாலமாய் காணாமல் இருக்கும் என் மகன் இறந்துதான் போயிருப்பான். அவனுக்கான பிரார்த்தனை எனக்கு நிம்மதி தரும்.

ஆண்: (எழுந்துகொண்டு, அதிகாரியிடம்) யாரையும் இழக்காத நான் எதற்கு பிரார்த்தனையில் கலந்துகொள்ள வேண்டும்? நான் போகிறேன்.

(ஆண் நகரத் துவங்கும்போது, பின்னணியில் நோயாளியின் முனகல் கேட்கிறது. ஆண் நிற்கிறான். மேடையின் இடதுபக்கத்திலிருந்து முனகியபடியே நோயாளி தள்ளாடி நடந்து வருகிறான். ஆண் அவனருகே போகிறான்.)

ஆண்: [நோயாளியிடம்] நோயாளி, என்ன ஆயிற்று?

நோயாளி: [ஆணிடம்] மீண்டும் நோயாளி ஆகிவிட்டேன். [நோயாளி ஆணைப் பிடித்தபடி நிற்கிறான்]

கிழவி: [நோயாளியை நோக்கி] எப்படி நோய் திரும்பியது நோயாளி?

நோயாளி: [கிழவியை நோக்கி] மீண்டும் தீர்ந்துவிடும் நோய். [எங்கோ பார்த்தபடி] திரும்பி வருவதற்கு. [ஆணிடம்] உன்னோடு பேசத்தான் வந்தேன். ஒரு முக்கியமான செய்தி. நீ வீட்டைவிட்டு வந்து பலநாட்கள் ஆகிவிட்டன அல்லவா?

ஆண்: [நோயாளியிடம்] ஆம். வா, சென்றபடியே பேசுவோம்.

நோயாளி: [ஆணிடம்] பொறுமையாய்க் கேள். ஒரு செய்தி உன் அக்காவைக் காணவில்லை.

ஆண்; [அதிர்ந்து] என்ன [சற்றுக் கழித்து] உண்மையாகவா?

நோயாளி: [ஆணிடம்] உண்மையாகத்தான்.

ண்: [நோயாளியிடம்] நம்பித்தான் ஆகவேண்டும் இல்லையா? [சற்றுக் கழித்து] அவளும், இறுதியில் அவளும். [தனக்குள்] என்னவாயிருக்கும்?

வி: [தனக்குள்] வேறு என்ன?

ண்: [தனக்குள்] ஏன் இப்படி நிகழ்கிறது?

வி: [தனக்குள்] தவிர்க்க இயலாது.

ண்: (கிழவியிடம், கோபமாக) பேசாதே. நீ பேசாதே.

திகாரி: (ஆணிடம்) எனவே நீயும் இங்கேயே இருக்கப் போகிறாய்—பிரார்த்தனைக்காக.

ண்: (தனக்குள்) நானும் சிக்கிக்கொண்டு விட்டேன்.

திகாரி: (பொதுவாக) எனவே பிரார்த்தனை நியாயப்படுத்தப்படுகிறது. (எல்லோரிடமும்) எல்லோரும் எழுந்து வாருங்கள். பிரார்த்தனையை நிறைவேற்றுவோம். (எல்லோரும் எழுகிறார்கள். இளைஞனும் இளம் பெண்ணும் அமர்ந்துகொண்டிருப்பதைப் பார்த்து) வாருங்கள் நண்பர்களே. உங்களுக்கு விருப்பம் அற்ற போதும் மற்றவரின் விருப்பத்திற்கு சாட்சியாய் இருங்கள். வாருங்கள் எல்லோரும் வாருங்கள்.

(நடைபாதைமீது பெட்டியை வைத்துவிட்டு இளைஞனும், இளம் பெண்ணும் எழுகிறார்கள். நோயாளி மேடையின் வலதுபுறமாய் ஒதுங்கிக்கொள்ள எல்லோரும் சற்றுமுன் வந்து நிற்கிறார்கள். கிழவி கீழே அமர்கிறாள். கிழவரும் அமர்கிறார்.)

திகாரி: (ஆணையிடுவதுபோல, எல்லோரிடமும்) சீக்கிரம். சீக்கிரம்.

(மேடையின் வலதுபுறத்திலிருந்து காவல்காரன் 2, வேகமாக வருகிறான்.

வல்காரன் 2: (அதிகாரியிடம், பதற்றத்துடன்) ஐயா, ஐயா, பிணங்கள் கிடைக்கத் துவங்கிவிட்டன.

திகாரி: (திரும்பி, ஆச்சர்யமாய், காவல்காரன் 2—இடம்) என்ன உண்மையாகவா?

வல்காரன் 2: (அதிகாரியிடம்) ஆம் ஐயா. பிணங்கள் கிடைக்கத் துவங்கி விட்டது.

திகாரி: (எல்லோரிடமும், பொதுவாக) எனவே பிணங்கள் கிடைக்கத் துவங்கிவிட்டன. கவலைப்படாதீர்கள். உங்கள் எதிர்பார்ப்பு, பொருள் பெறப் போகிறது. (சற்று அவசரமாக) நான் போகிறேன். நீங்கள் எதிர்பார்க்கிற பிணங்களோடு வருகிறேன். நாம் பிரார்த்தனையை பிறகு வைத்துக்கொள்வோம், அதுவும் தேவைப்பட்டால்.

(அதிகாரி, காவல்காரர்களோடு மேடையின் வலப்புறமாக வெ கிறான். அவன் போன திசையையே. எல்லோரும் பார்க்கிறார்க அமைதி நிலவுகிறது.
மேடையில் ஒளி குறைந்து இருளாகிறது)

### அங்கம்—2

(மேடையில் ஒளி அதிகரிக்கிறது. இதே இடம்.

கிழவி, ஆண், கிழவர், இளம்பெண், இளைஞன் ஆகியோர் பாதையில் அமர்ந்திருக்கிறார்கள். அமைதி நிலவுகிறது.

நோயாளி இடவலமாக நடைபோட்டபடி இருக்கிறான். கடிகாரத்தைப் பார்க்கிறார். கடிகாரத்தைக் காதில் வை பார்க்கிறார். மீண்டும் கடிகாரத்தைப் பார்க்கிறார். அருகிலுள்ள பெண்ணிடம் கடிகாரத்தைக் காட்டி, சைகையாக மணி கேட் இளம்பெண், கடிகாரம் இல்லை என்பதை, தன் மணிக்கட் காட்டி சைகையால் கூறுகிறாள். கிழவர் சோர்வாய் தலையா கொள்கிறார். கடிகாரத்தைக் கழற்றி குப்பைத்தொட்டியை வீசுகிறார். அது குப்பைத் தொட்டி அருகேவந்து விழுகிறது. கு தொட்டி தன் பின்புறம் இருக்க நடந்துகொண்டிருந்த நோ அதிர்ந்து திரும்புகிறான்.)

நோயாளி: (அதிர்ந்து, எல்லோரிடமும்) என்ன, என்ன ஆயிற்று?

கிழவி: (துக்கத்திலிருந்து மீண்டவள்போல) என்ன ஆனது? கொன் கிறார்களா?

நோயாரி: (எல்லோரிடமும்) என்ன அது.

இளைஞன்: (சோர்வாக, நோயாளியிடம்) கடிகாரம் வீசப்பட்டுவிட்டது.

கிழவி: (மகிழ்ந்து) உண்மையாகவா? (எல்லோரிடமும்) எங்கே?

ஆண்: (கிழவியிடம், குப்பைத்தொட்டியைச் சுட்டிக்காட்டி) அதோ அ

கிழவி: (பெரு மகிழ்ச்சியோடு) அப்பாடா. (எழுகிறாள்) நல்லது. (கு தொட்டி அருகே சென்று குனிந்து கடிகாரத்தை உற்றுப் பா நிமிர்ந்து) அப்பாடா நிம்மதி. (சிரிக்கிறாள்) கடிகாரம் வீசப்பட் (சிரிக்கிறாள்) இனி கவலையில்லை. (சற்றுக் கழித்து) உடல்கள் விடும். உடனே சிரித்தபடியே நடக்கிறாள்)

ஆண்: (கிழவியை நோக்கி, இளக்காரமாய்) நல்ல நம்பிக்கை!

கிழவி: (நின்று, ஆணிடம்) பின்னே எப்படி? ம்? (நடந்துசென்று தன் அமர்ந்துகொள்கிறாள். தனக்குள்] கிடைத்தபின் பொருளே மா

ர்: (தனக்குள்) பைத்தியம். (எழுகிறான்)

(அமைதி நிலவுகிறது).

ர்: (பொதுவாக) தோண்டியெடுக்கும் பணியை நாமே மேற்கொண்டு விடலாம் போலிருக்கிறது.

யாளி: (அதிர்ந்து) என்ன? (கிழவரை நெருங்கி) நல்ல வேடிக்கை. (சிரிக்கிறான்) நல்லவேடிக்கை.

ர்: (நோயாளியிடம்) ஏன் என்ன தவறு?

யாளி: (கிழவரிடம், சிரித்தபடி) தவறு எதுவும் இல்லை. வேடிக்கைதான். (சற்றுக் கழித்து) என் நோயை நீங்கள் தாங்கிக்கொள்ள இயலுமா? (கிழவர் மௌனம் சாதிக்கிறார்.) சொல்லுங்கள். நீங்கள் என் நோயை அனுபவிக்க இயலுமா?

ர்: (மெதுவாக) இல்லை.

யாளி: (நகர்ந்தபடி, மெதுவாக) இது இப்படி இருக்கையில் நாம் எதற்கு தோண்டியெடுப்பவரின் வேதனையை ஏற்றுக்கொள்ள வேண்டும்? (நிற்கிறான்.)

(நோயாளியிடம்) தத்துவம் பேச முயல்கிறாயா?

யாளி: (ஆணிடம்) தப்பிக்கும் நோக்கத்துடன்தான்.

ர்: (நோயாளியிடம்) எதிலிருந்து தப்பிக்கும்?...

யாளி: (கிழவரிடம்) எல்லாவற்றிலிருந்தும்தான். (சற்றுக் கழித்து) என் நோயின் உக்கிரத்திலிருந்து (சற்றுக் கழித்து, பொதுவாக) இந்த சூழலின் இறுக்கத்திலிருந்து... (சற்று அதிக நேரம் கழித்து, எல்லோரிடமும்) நான் போகிறேன்.

(நோயாளி மெதுவாக மேடையின் வலதுபுறமாகச் சென்றுவிடுகிறான். அமைதி நிலவுகிறது.)

(தனக்குள்) எவ்வளவு பசி தெரியுமா?

(கிழவியிடம்) ஆனால் ஏன் சாப்பிடவில்லை?

(சற்று அதிக நேரம் கழித்து, ஆணிடம்) முயற்சிதான்.

(சற்றுக் கழித்து, பொதுவாக) இன்னும் எத்தனை காலத்திற்கு என்று தெரியவில்லை.

ன்: (கிழவரிடம்) முயற்சியா?

(எழுந்தபடி, தனக்குள்) எல்லாம்தான். (மெதுவாய் நடந்து குப்பைத் தொட்டியில் தேடுகிறாள். தனக்குள்) கிடைக்கும். நிச்சயம் ஒன்றாவது. இலையை எடுக்கிறாள். நிமிர்ந்து மெதுவாக) இதோ ஓர் இலை. ல் உணவு இல்லாத இலை. சுத்தமான இலை. (இலையை எடுத்து

எல்லோருக்கும் காண்பிக்கிறாள்) சுத்தமான இலை கிடைத்துவிட்டது எனவே...

ஆண்: (கிழவியிடம், இளக்காரமாய்) எனவே சுத்தமான உணவும் இருக்கும்

கிழவி: (குப்பைத் தொட்டியில் குனிந்து, தேடியபடி) நம்பு. கிடைக்கும் (தேடியபடியே) வழி தெரியாதவர்கள். (சற்றுக் கழித்து) கிடைத்துவிட்டது இதோ கிடைத்துவிட்டது. (உணவோடு ஓர் இலையை எடுக்கிறாள் நிமிர்ந்து மற்றவர்களிடம்) இதோ கிடைத்துவிட்டது. யார் கையும் பட உணவோடு சுத்தமான இலை. (மெதுவாய் நடந்து தன் இடத்திற்கு சென்று அமர்கிறாள். அருகில் அந்த இலையை வைத்துக் கொள்கிறாள்.)

ஆண்: (கிழவியிடம்) எனவே வெகுகாலமாய் பசியோடு எதிர்பார்த்து கிடைத்துவிட்டது... (சற்றுக் கழித்து) இலை.

கிழவி: (ஆணிடம்) ஆம்.

ஆண்: (கிழவியிடம்) எப்படியாயினும் எச்சிலை. நீ எச்சில் உணவைச் சாப் பிடப் போகிறாய். இல்லையா?

கிழவி: (எழுந்து கோபமாய், ஆணிடம்) தெரியாததைப் பற்றிப் பேசாதே! (அமர்ந்து கொள்கிறாள்)

ஆண்: (கிழவியிடம்) எனக்கென்ன கவலை? உன் பசி. நீ தேர்ந்தெடு உணவு. யாருக்கு என்ன கவலை?

[நீண்ட அமைதி நிலவுகிறது. எல்லோரும் அசௌகர்ய பாவனை யோடு தலையசைத்துக் கொள்கிறார்கள். கிழவி இலையைப் பார் பதும் சிந்திக்கிற பாவனையோடு தலையுயர்த்திக் கொள்வதும இருக்கிறாள். கிழவர் எழுந்துகொள்கிறார். மெல்ல நடைபோ கிறார்.]

கிழவர்: (பொதுவாக) சவங்களுக்கான இந்தக் காத்திருப்பில், துக்கத்தி நீட்சியில் வறட்சியே மிச்சமாகிறது. (சற்றுக் கழித்து) பிணமானபின் பிரி மானவர்களும் எதிரிகளாகத் தெரிகிறார்கள்.

இளைஞன்: (கிழவரை நோக்கி) பிரியமானவர்களே எதிரிகளாகிவிட்ட பிரியமேயற்ற என் தந்தை...

இளம்பெண்: (தனக்குள்) என் வாழ்க்கை முழுக்க முன்னால் நெருடிய கணவர்...சாட்சியாய் என் குழந்தை... (சற்றுக் கழித்து) நிம்மதி எதிரிகள்...

கிழவி: (கோபமாய், இளம்பெண்ணிடம்) குழந்தையை எதிரி என்கிறாய்

இளம்பெண்: (மெல்ல தனக்குள்) எதிரிகள். இறந்தபின் உடல்கள் எல் எதிரிகள்தான். (சற்றுக்கழித்து) என் கணவர்தான் முக்

உயிரோடும் இறந்தும். (சற்றுக் கழித்து) என்றும் பகைவராய். (எழு கிறாள். மெல்ல முன்னே வந்து நிற்கிறாள். தனக்குள்) என் குழந்தைக்கு என்ன தெரியும்? ஒன்றும் அறியாதது அது. (அழுகிறாள்)

இளைஞன்: (எழுகிறான். இளம் பெண்ணின் அருகில் வந்து நிற்கிறான். அவளிடம்) உன் கடந்தகாலம் மகிழ்வாய் இருக்கவில்லையா? ம்? (இளம் பெண் அழுதபடியே இருக்கிறாள்) சொல் என்னிடம் சொல். நம் கடந்த காலத்தின் உரிமையோடு சொல்.

[கிழவர் மேடையின் வலப்பக்கம் உற்று நோக்கியபடி இருக்கிறார். ஆண் தலையில் கை வைத்தபடி இருக்கிறான். கிழவி சிந்திக்கும் பாவனையோடு இருக்கிறாள்]

இளம்பெண்: (அழுவதை நிறுத்தி, தனக்குள்) மனிதராய் வாழவில்லை என் கணவர். (இளைஞனிடம்) சந்தேகமும் போராட்டமும் என்று கழிந்தன. நாட்கள்...

இளைஞன்; (இளம்பெண்ணிடம், சோர்வாய்) எத்தனைநாட்கள்...(தனக்குள்) என் கனவுகளைச் சிதைத்துவிட்டு அல்லவா நீ சென்றாய்...

இளம்பெண்: (இளைஞனிடம்) சவமாய் அல்லவா வாழ்ந்தேன்.

கிழவி: (தனக்குள்) மீட்கப்பட்டா?

இளம்பெண்: (தனக்குள்) ஆனால் நம்பிக்கையில். (இளைஞனிடம்) மீள முடியும் என்ற நம்பிக்கையில்.

இளைஞன்: (இளம்பெண்ணிடம்) காத்திருந்தேன் தெரியுமா? உடைந்த கனவுகளைச் சேர்த்து வைத்து...

கிழவி: (தனக்குள்) நிச்சயம் கிடைக்கும்.

இளைஞன்: (இளம்பெண்ணிடம்) சிக்கலோடுதான் கழிந்தது என் வாழ்வும். (சற்றுக் கழித்து, தனக்குள்) எப்பொழுதும் தன் செல்வத்தைப் பற்றியே எண்ணி வந்து அதனை ஆள்தலில் கர்வம் கொண்ட என் தந்தை...

இளம்பெண்: (இளைஞனிடம்) எல்லாமே ஆள்தல்தானா?

இளைஞன்: (சற்றுக் கழித்து, தனக்குள்) என்னை என் வழியில் செல்ல விடாமல் தன் வாழ்வை என் மீது சுமத்தியவர்... (இளம் பெண்ணிடம்) நான் இழந்த தனித்துவமும்...சுமந்த அவமானங்களும்...(சற்றுக் கழித்து, தனக்குள்) அந்த மனிதன் (சற்றுக் கழித்து, இளம் பெண்ணிடம், தீவிர மாய்) உண்மையில் அவருடைய சவத்தைக் காணும் கனவிலேயே இருந் தேன் நான்...

(தனக்குள்) சவங்கள் எளிதில் கிடைத்துவிடுவதில்லை...

இளம்பெண்: (பதற்றத்துடன், இளைஞனிடம்) இறுதியில் என்ன—என்ன மிஞ்சப் போகிறது?...

கிழவி: (சற்றுக் கழித்து, பொதுவாக) பிணம் எரித்த நிம்மதி.

இளம்பெண்: (சற்றுக் கழித்து, இளைஞனிடம்) அவ்வளவுதானே. [துக்கத் துடன்] அவ்வளவுதானே... தனிமை... வாழ்நாள் முழுக்க. இப்போதும், இனியும். யாருமற்று.

இளைஞன்: [இளம் பெண்ணிடம்] தனிமை? இல்லை. இல்லை. [சற்றுக் கழித்து] இல்லை. கவலைப்படவேண்டாம், யாரும். ]சற்றுக் கழித்து] நீ. [சற்றுக் கழித்து] நாம். [சற்றுக் கழித்து] ஏனெனில் எதிர்காலம் நம்மால் உருவாக்கப்படக் கூடியது...

இளம்பெண்: [புன்னகைத்தபடி, இளைஞனிடம்] இப்படி நம்பி நம்பித்தானே காலம் கடந்தது. கடக்கிறது. கடக்கும்—கடந்தகாலத்தின் சுமையோடு.

இளைஞன்: [அதிர்ந்து] என்ன? என்ன சொல்கிறாய்? அப்படியெனில் நம்ப இயலாதா?

இளம்பெண்: [இளைஞனிடம் நிதானமாக] இல்லை. எதுவுமில்லை. நம்ப லாம். [சற்றுக் கழித்து) நன்றாகக் கழியக் கூடும் காலம். [சற்றுக் கழித்து] நிம்மதியான காலம்.

இளைஞன்: [இளம் பெண்ணிடம்] நிச்சயமாக. நிச்சயமாக. [பொதுவாக] நிச்சயமாக.

கிழவர்: [சற்றுக் கழித்து, தனக்குள், கேள்வியாக] நிச்சயமாக? எனக்கு நம்பிக்கையில்லை. [மெதுவாய் நடந்து, மேடையின் மையப் பகுதிக்கு வருகிறார்.]

கிழவி: [சற்றுக் கழித்து, கிழவரிடம்] பிணம் எரித்து முடித்தபின் நிம்மதியான காலமின்றி வேறென்ன?

கிழவர்: [கிழவியிடம்] உன் இந்தப் பேச்சைக் கேட்டுக் கேட்டு எனக்கு சோர்வாகிவிட்டது. [திரும்பி, தனக்குள்] மனைவியின் உடலுக்குக் காத்திருக்கும் நிச்சயமற்ற இந்த எதிர்பார்ப்பு...[கிழவியிடம்] என்ன நிலைக்கு போகிறது? [சற்று விலகிச் சென்று எல்லோரிடமும்] ஆசையாய் வளர்த்த மகனும் மகளும் உயர் கல்வி கற்று, உயர் பதவிகளை அடைந்து எங்கள் இலட்சியத்தை நிறைவேற்றினார்கள். [சற்றுக் கழித்து] எங்கள் சொல் கேட்டு திருமணம் செய்து, தங்கள் பெருமைக்காகவும், உயர்வுக்காகவும் வாழ்வுக்காகவும் தொலைதூரத்தில் காலூன்றிவிட்டார்கள். நிரந்தரமாக

ஆண்: [கிழவரிடம்] வரவே மாட்டார்களா?

கிழவர்: [எல்லோரிடமும்] வருவார்கள். நிச்சயம் வருவார்கள். தகவல் அனுப்பியாகிவிட்டது. வருவதாய் பதில் தகவலும் வந்துவிட்டது. நிச்சயம் வருவார்கள். தங்கள் தாய்க்கு இறுதி அஞ்சலி செலுத்த அவர்கள் ஆர்வமாகத்தான் இருக்கிறார்கள். [சற்றுக் கழித்து] ஆனால் எப்படியும் திரும்பிச் சென்றுவிடுவார்கள் அவர்கள். [சற்றுக் கழித்து, தனக்குள்] என்னைத் தனியாய் விட்டு. [சற்றுக் கழித்து] தனிமை.

ஆண்: [கிழவரிடம்] தனிமைதானா?

கிழவர்: [சற்றுக் கழித்து, எல்லோரிடமும்] வேறு என்ன? தனிமைதான். [சற்றுக் கழித்து] எப்படியும் சோர்வே மிஞ்சப் போகிறது வாழ்வில். அது நிச்சயம். ஆனால் கிடைக்கும் என்ற இந்த நிச்சயமற்ற எதிர்பார்ப்பு... வேண்டாம். இனி வேண்டாம். போதும். போதும். (இரு கைகளாலும் தலையைப் பிடித்துக்கொள்கிறார். மெதுவாக, நடைபாதையில், தன் இடத்தில் அமர்ந்து கொள்கிறார்.)

கிழவி: [கிழவரிடம்] இனி என்ன செய்வதாய் உத்தேசம்?

கிழவர்: (கிழவியிடம்) இங்கிருந்து சென்றுவிடலாம் என்று இருக்கிறேன்.

கிழவி: [அதிர்ந்து] என்ன?

கிழவர்: (கிழவியிடம்) ஆம் வேறு வழி இருப்பதாகத் தெரியவில்லை. நான் போய்விடத்தான் போகிறேன். அவளுடைய சவத்தைக் கண்டெடுத்த பிறகு அவர்கள் தெரியப்படுத்தத்தான் போகிறார்கள். [சற்றுக் கழித்து, மெதுவாக] யாரும் மற்றவரின் சவத்தைச் சொந்தம் கொண்டாடப் போவதில்லை.

ஆண்: (சற்றுக் கழித்து, எழுந்து, மெதுவாக) நானும்கூட இங்கிருந்து போய்விடலாம் என்று இருக்கிறேன். [சற்றுக் கழித்து] பயணிகளை எதிர்பார்த்து வந்த என் தொழிலும் இன்று தோல்வியாகிவிட்டது. [சற்று அதிக நேரம் கழித்து] காணாமல் போய்விட்ட என் அக்கா மீது எனக்கு அதீத பற்று எதுவும் இருக்கவில்லை. அவள் இறந்து போயிருப்பாள் என்பது வேதனைக்குரியது என்றாலும் அவளது உடலுக்காகக் காத்திருந்து நான் சிரமப்படவேண்டும் என்பது கட்டாயமில்லை. போதும் இந்த வெறுமை. [சற்றுக் கழித்து]கண்டெடுக்கப்படாத சடலங்களை எதிர்பார்த்து எத்தனை காலம் வாழ்வது?

கிழவர்: [பொதுவாக] இப்படியான வாழ்வு வாழ்வதைவிட வாழாமல் இருக்கலாம்.

ஆண்: (இளக்காரமாய், தனக்குள்) நல்ல வாழ்தல்.

இளம்பெண்: (சற்றுக் கழித்து, பொதுவாக) வாழ்தல். இந்த வாழ்தல் [சற்றுக் கழித்து] இது ஒரு மெதுவான மரணம்.

இளைஞன்: (தனக்குள்) மெதுவான மரணம்.

கிழவர்: (சற்றுக் கழித்து, பொதுவாக) மரணம்? [சற்றுக் கழித்து] மரணம் ஒரு கருணையாகவாவது இருக்கும்.

ஆண்: [பொதுவாக] மரணம் ஒரு கருணையாகத்தான் இருக்கும்.

இளம்பெண்: (பொதுவாக) கருணையாகத்தான் இருக்கும்.

இளைஞன்: (எல்லோரிடமும், பொதுவாக) இனி நாம் இங்கிருந்து போக வேண்டியதுதான்.

மூவர்: (எல்லோரிடமும்) சரியான முடிவு.

இளைஞன்: (எல்லோரிடமும்) ஏற்கனவே நிறைய நேரம் கடந்துவிட்டது பொருளற்று.

இளம்பெண்: (பொதுவாக) வெறுமையாய்.

ஆண்: (எல்லோரிடமும்) நாம் வெகுகாலம் முன்பே போயிருக்க வேண்டும் பொறுத்தது முட்டாள்தனம்.

கிழவர்: (எல்லோரிடமும்) இனியும் எதற்கு வீணாய் பேச்சு? நகர்வோம் (எழுகிறார்)

இளம்பெண்: (பொதுவாக) போவோம்.

[இளைஞன் நகர்ந்து சென்று, பெட்டியை எடுத்துக் கொள்கிறான் அவனோடு இளம்பெண், ஆண், கிழவர் ஆகியோரும் மெதுவாக மேடையின் இடது பக்கம் நோக்கி நகர்கிறார்கள்.]

கிழவி: [அவர்களை நோக்கி] எல்லோரும் போங்கள். எல்லாப் பிணங்களையும் நானே அடையாளம் காண்கிறேன்.

[மேடையின் வலதுபுறத்திலிருந்து காவல்காரன் வேகமாகவருகிறான்

காவல்காரன்: [வெளியே நகர்பவர்களைப் பார்த்து] நில்லுங்கள். நில்லுங்கள் [அவர்கள் நிற்கிறார்கள். அவர்களின் அருகில் வந்து] போகாதீர்கள் போகாதீர்கள். மீட்கப்பட்ட சவங்கள் கொண்டு வரப்படுகின்றன போகாதீர்கள்.

ஆண்: [காவல்காரனிடம்] உங்கள் பேச்சைக் கேட்டு நாங்கள் ஏராளமான ஏமாற்றம் கண்டுவிட்டோம்.

இளம்பெண்: [காவல்காரனிடம்] மீட்கப்படுதலில் நம்பிக்கை போய்விட்டது எங்களுக்கு.

காவல்காரன்: [அவர்கள் அனைவரிடமும்] தயவு செய்து இப்படி எண்ணா தீர்கள்.

கிழவர்: (காவல்காரனிடம்) நாங்கள் பொறுமை இழந்துவிட்டோம்.

காவல்காரன்: (அவர்கள் அனைவரிடமும்) இது நியாயமா, சொல்லுங்கள்? உங்கள் அனைவருக்காகவும் நாங்கள் கடுமையாக உழைத்து, எங்கள் தனிப்பட்டத் துயரங்களை ஒதுக்கி வைத்து, தோண்டும் பணியை மேற் கொண்டோம். மிகுந்த வேதனையோடு மீட்கப்பட்ட பிணங்களை அடை யாளம் காணாமல் செல்வது, எங்களை அவமானப்படுத்துகிற ஒரு செயல் மட்டுமல்ல, உங்களை வாழ்வின் இறுதிவரை துரத்தும் பெரிய இழப்பும்கூட.

இளைஞன்: (பொதுவாக, இளக்காரமாய்) மீண்டும் ஓர் இழப்பா?

காவல்காரன்: (பவ்யமாக, எல்லோரிடமும்) அதற்குத்தான் சொல்கிறேன். (சற்று உருக்கமாக) தயவு செய்து வாருங்கள். வாழ்ந்த பிணங்களுக்கு அடையாளம் கொடுங்கள். எங்கள் பணியைக் கௌரவப்படுத்துங்கள். (ஆண், கிழவர், இளம்பெண், இளைஞன் ஆகியோர் மெல்ல திரும்பி நடக்கிறார்கள். காவல்காரன் சற்றுப் பின்னோக்கி நகர்ந்தபடி, அவர் களிடம்) சிறிது காத்திருங்கள். விரைவில் வருகிறோம், பிணங்களோடு. (அவன் திரும்பி மேடையின் வலப்பக்கம் நோக்கி நடக்கிறான்.)

கிழவர்: (காவல்காரனை நோக்கி உரத்து) இனியும் எங்கள் பொறுமையை சோதிக்க வேண்டாம்.

[காவல்காரன் மேடையின் வலதுபக்கமாய் சென்றுவிடுகிறான். ஆண், கிழவர், இளம்பெண், இளைஞன் ஆகியோர் நடைபாதை மீது அமர்ந்து கொள்கிறார்கள்.]

கிழவி: (எல்லோரிடமும்) திரும்பி வந்துவிட்டீர்களா? தெரியும், திரும்பி வருவீர்கள் என்று. (சற்றுக் கழித்து) யாரும் அவ்வளவு எளிதில் விடுபட்டு விடமுடியாது.

[அமைதி நிலவுகிறது.
பின்னணியில் நோயாளியின் முனகல் ஒலி கேட்கிறது.]

கிழவர்: (பொதுவாக) இந்த நோயாளி போடும் சத்தம் பெரும் தொல்லை.

கிழவி: (பொதுவாக) இன்னும் இவன் இருக்கிறானே. (சற்றுக் கழித்து) ஆச்சர்யம்தான்.

[பின்னணியில் நோயாளியின் முனகல் நிற்கிறது. சில வினாடிகள் அமைதி நிலவுகிறது. மேடையில் மெல்ல ஒளி குறைகிறது.]

இளைஞன்: (பொதுவாக) இருளத் துவங்கிவிட்டது.

இளம்பெண்: (இளைஞனிடம்) விடியுமா?

[மேடையில் ஒளி முழுக்கக் குறைந்து, இருளாகிறது.]

**அங்கம்—3**

[அதே இடம்.

கிழவி தன் இடத்தில் அமர்ந்திருக்கிறாள். ஆண் மேடையில் நடை போட்டபடி இருக்கிறான். கிழவர் தன் இடத்தில் அமர்ந்திருக்கிறார். அவரையடுத்து இளைஞன் அமர்ந்திருக்கிறான். அவனையடுத்து இளம்பெண் அமர்ந்திருக்கிறாள். இளைஞன் தனக்கு வலதுபுறமாக, தன் பெட்டியைத் திறந்து தேடியபடி இருக்கிறான். இளம்பெண்ணும் கிழவரும் அவனுடைய செயலைக் கவனித்தபடி இருக்கிறார்கள். அவன், பெட்டியில் இருந்த துணிகள், புத்தகம், பற்பசை போன்ற வற்றை வெளியே எடுத்துப் பரப்பிவிட்டபடி இருக்கிறான். அவன் எடுத்து வைத்த புத்தகத்தை எடுத்துப் புரட்டியபடி இருக்கிறார் கிழவர்.]

ஆண்: (நடைபோட்டபடி, இளைஞனிடம்) உணவு ஏதாவது உண்டா? பசி உயிர் போகிறது.

இளைஞன்: (பெட்டியில் தேடியபடி) இதில் இருந்த நினைவு.

இளம்பெண்: (இளைஞனிடம்) நினைவு மட்டும்தானா? (சற்றுக் கழித்து) வெறுமையோடு பசியும் இப்போது வதைக்கிறது.

கிழவர்: (புத்தகத்திலிருந்து மீண்டு, பொதுவாக) அகோரப்பசி.

இளைஞன்: (கிழவரிடம்) எனக்கும்தான். என்ன செய்வது?

ஆண்: (கிழவியை நோக்கி) கிழவிக்குக் கவலையில்லை. கையில், உணவோடு கண்டெடுத்த இலை இருக்கிறது. கிழவி, சாப்பிடவில்லையா? காய்ந்து போயிருக்குமே, உணவு.

[கிழவி, ஆணை ஒருமுறை பார்த்துவிட்டு தலையைத் தாழ்த்திக்கொள் கிறாள். அமைதி நிலவுகிறது.

இளைஞன், கலைந்த தன் பெட்டியை மீண்டும் அடுக்குகிறான். அதிலிருந்து ஒரு சிறு மோதிரப் பெட்டியை எடுக்கிறான்.]

இளைஞன்: (இளம் பெண்ணிடம் மோதிரப் பெட்டியைக் காட்டி) இதோ பார் மோதிரப்பெட்டி. (இளம்பெண் அதைப் பார்க்கிறாள்) எத்தனை மோதிரம் பார்...

இளம்பெண்: (இளைஞனிடம்) இரண்டு.

இளைஞன்: (மோதிரப் பெட்டியை மூடி, பெட்டியில் வைத்தபடி) இவற்றைச் சேமித்து வைத்திருக்கிறேன்—என் கனவுகளோடு. (எல்லாப் பொருட் களையும் வைத்து பெட்டியை மூடிவிடுகிறான். கிழவரின் கையில் புத்தகம் இருக்கிறது.

இளம்பெண்: (இளைஞனிடம்) இன்னும் மிச்சமிருக்கிறதா?

இளைஞன்: (இளம்பெண்ணிடம்) இல்லையா?

இளம்பெண்: (இளைஞனிடம்) காயத்துவங்கிவிட்டன. (வேறு பக்கம் திரும்பி) நான் கொண்டு வந்த மாலைகள்.

இளைஞன்: (சற்றுக் கழித்து, இளம் பெண்ணிடம்) இருப்பினும், பரவாயில்லை. (பெட்டியை சரியாக மூடுகிறான்.)

கிழவர்: (இளைஞனிடம், புத்தகத்தை நீட்டி) இந்தப் புத்தகம் மிஞ்சிவிட்டது.

இளைஞன்: (கிழவரிடம்) மிச்சமாகிப் போகட்டும். என் தந்தையின் நாட்குறிப்பு அது.

கிழவர்: (இளைஞனிடம்) சுவையாக இருக்கிறது.

[கிழவர் அந்தப் புத்தகத்தைப் புரட்டியபடி இருக்கிறார். அமைதி நிலவுகிறது.

மேடையின் வலதுபுறத்திலிருந்து, பத்து அல்லது பன்னிரண்டு வயது மதிக்கத்தக்க ஒரு சிறுவனும் சிறுமியும் வருகிறார்கள். அவர்கள் மிகவும் சோர்வாகத் தெரிகிறார்கள். அவர்கள் கையேந்தியபடியே ஒவ்வொருவரையும் அணுகுகிறார்கள்.]

சிறுவன், சிறுமி: (எல்லோரிடமும் கையேந்தியபடியே, நடந்துகொண்டு) பசிக்கிறது அய்யா, பசிக்கிறது அம்மா...ரொம்பப் பசிக்கிறது...சாப்பிட்டு வெகு நாட்கள் ஆகிவிட்டன...ஏதாவது சாப்பிடக் கொடுங்கள்...

கிழவி: (பொதுவாக) எங்கள் பசிக்கு உணவில்லை.

ஆண்: (எல்லோரிடமும்) இப்போது நம்மோடு இவர்களும்.

இளம்பெண்: (இளைஞனிடம்) பாவம் இந்தக் குழந்தைகள்.

சிறுவன் சிறுமி: [ஒவ்வொருவரிடமும் சென்று, கையேந்தியபடியே] பசிக்கிறது. பசிக்கிறது. உண்ண ஏதாவது கொடுங்கள்.

ஆண்: (சிறுவன், சிறுமியிடம்) நீங்கள் யார்?

சிறுவன்: (ஆணிடம்) தெரியவில்லை.

இளம்பெண்: (சிறுவன், சிறுமியிடம்) உங்கள் தாய், தந்தை எங்கே?

சிறுமி: (இளம்பெண்ணிடம்) காணவில்லை.

கிழவர்: (சிறுவன், சிறுமியிடம்) காணவில்லையா? என்ன ஆயிற்று அவர்களுக்கு?

சிறுவன்: (கிழவரிடம்) தெரியவில்லை.

இளைஞன்: (எல்லோரிடமும்) இறுதியில் இவர்களும்...

சிறுவன், சிறுமி: (எல்லோரிடமும் சென்று) பசிக்கிறது. பசிக்கிறது. உணவு கொடுங்கள். சாப்பிட ஏதாவது கொடுங்கள்.

(சோர்ந்துபோனவர்களாய், சிறுவனும் சிறுமியும் மேடையின் இடது புற ஓரத்தில் அமர்ந்துகொள்கிறார்கள்.

சிறிது நேரம் அமைதி நிலவுகிறது.

மேடையின் வலதுபுறத்திலிருந்து அதிகாரி வருகிறான். அவன் கையில் ஒரு பொட்டலத்தை வைத்திருக்கிறான்.)

ஆண்: (அதிகாரியைப் பார்த்து) இதோ அதிகாரி.

(கிழவர் அதிர்ந்து எழுகிறார். கிழவியும் ஆர்வமாய் எழுகிறாள்.)

அதிகாரி: (எல்லோரிடமும்) எல்லோரும் பொறுமையாக இருங்கள். நான் பிணங்களைப் பற்றிய செய்தியைக் கொண்டுவரவில்லை.

இளைஞன்: (எழுந்துகொண்டு, அதிகாரியிடம்) நீங்கள் கொண்டுவரவே போவதில்லை என்று நாங்கள் எப்போதோ உணர்ந்துகொண்டோம். (அதிகாரியின் அருகில் சென்று நிற்கிறான்.)

அதிகாரி: (எல்லோரிடமும்) அடுத்த சில மணி நேரங்களில் பிணங்கள் உங்கள் முன்னால் இறக்கப்படும்.

கிழவி: (அதிகாரியிடம்) இன்னும் சில மணி நேரங்களா?

அதிகாரி: (சோர்வான முகத்துடன்) என் வீட்டில் ஒரு சோகம்.

இளம்பெண்: (எழுந்து, அதிகாரியை நோக்கி) நீங்களும் எதிர்பார்த்திருக்கும்படி...

அதிகாரி: (அவசரமாக, இளம்பெண்ணிடம்) ஓ. இல்லை. இல்லை. அந்த அவலம் இல்லை.

கிழவர்: (அதிகாரியிடம்) பிறகு...

அதிகாரி; (தலைகுனிந்து, சற்றுக்கழித்து) என் பிரியமான நாய் இறந்துவிட்டது.

கிழவி: (அதிகாரியிடம்) நாய்தானே.

கிழவர்: (அதிகாரியிடம்) பட்டினியாலா?

அதிகாரி: (கிழவரிடம்) இல்லை. நோயால்.

கிழவி: (அதிகாரிடம்) போனால் போகிறது. (சற்றுக்கழித்து) புதைத்துவிட்டுத் தானே வந்தாய்?

அதிகாரி: (கிழவியிடம்) ஆம்.

கிழவி: (அதிகாரியிடம்) நிம்மதிதான். (சற்றுக்கழித்து) வேறு என்ன? போகலாம் நீ.

அதிகாரி: (எல்லோரிடமும்) உங்களுக்கு உதவும் நோக்கத்துடனேயே வந்தேன் நான். (சற்றுக்கழித்து) நீங்கள் எல்லோரும் பசியாக இருப்பீர்கள் என்று எனக்குத் தெரியும்.

கிழவி: (அதிகாரியிடம்) அகோரப்பசி.

அதிகாரி: (எல்லோரிடமும்) உங்களுக்காக ரொட்டி கொண்டுவந்திருக் கிறேன்.

ஆண்: (அதிகாரியிடம், கோபமாய்) நாயின் மிச்சம்?

அதிகாரி: (சற்று இளக்காரமாய், ஆணிடம்) ஏன், அப்படியெனில் சாப்பிட மாட்டீர்களோ. (சற்றுக் கழித்து) நாய்க்காக வாங்கியதுதான்.

கிழவர்: (அதிகாரியிடம்) இறந்த நாய்க்காக?

அதிகாரி: (எல்லோரிடமும்) இருப்பினும் நாய் எச்சில் செய்யாதது. உண்மை யில் இன்னும் திறக்கப்படாத ரொட்டிப் பொட்டலங்கள். (சற்றுக் கர்வ மாக) இதைத் தருகிற என் பெரிய மனதை நீங்கள் பாராட்ட வேண்டும்.

இளைஞன்: (பொதுவாக) சரி.

அதிகாரி: [எல்லோரிடமும்] சில பொட்டலங்களே உள்ளன. உங்களில் யாருக்கு இவை கிடைக்காமல் போகுமோ! கவலையாயிருக்கிறது.

கிழவி: [அதிகாரியிடம்] அதைப்பற்றி நீ கவலைப்படாதே. சீக்கிரம் கொடு. [மேடையின் இடதுபுற ஓரத்தில் அமர்ந்திருந்த சிறுவனும் சிறுமியும் எழுந்து வேகமாய் நடந்து அதிகாரியின் அருகில் வந்து நிற்கிறார்கள். இளம்பெண்ணும் மாலைகளைக் கீழே வைத்துவிட்டு அதிகாரியின் அருகில் சென்று நிற்கிறாள்.]

அதிகாரி: [எல்லோரிடமும்] இதோ ரொட்டிப் பொட்டலங்கள்.

[அதிகாரி ரொட்டிப் பொட்டலம் தர, எல்லோரும் முண்டியடித்து வாங்க முற்படுகிறார்கள். கிழவருக்கு ரொட்டிப் பொட்டலம் கிடைக் கிறது. அவர் மகிழ்வாய் நகர்கிறார். எல்லோரும் போட்டியிட்டு, அதிகாரியிடமிருந்து ரொட்டிப் பொட்டலத்தை வாங்க முனைகிறார் கள். இளைஞனுக்கு பொட்டலம் கிடைக்கிறது. அவனிடமிருந்து வாங்க ஆண் முயல, இளைஞன் மிகுந்த பாதுகாப்புடன் அவனை விலக்கி நகர்கிறான். மற்றவர்கள் ரொட்டிப் பொட்டலம் வாங்க முற்படுகிறார்கள். முதலில் வாங்கிச் சென்ற கிழவர், நடைபாதை மீது அமர்ந்து பொட்டலத்தைப் பிரித்து ரொட்டியை சாப்பிடத் துவங்கு கிறார். அடுத்த ரொட்டிப் பொட்டலம் சிறுவனுக்குக் கிடைக்கிறது. சிறுமியும் மற்றவர்களும் அதிகாரியிடமிருந்து பொட்டலத்தைப் பெற்றுக்கொள்ள முயல்கிறார்கள்.]

அதிகாரி: [உரத்த குரலில், பொதுவாக] பொட்டலங்கள் தீர்ந்துவிட்டன. இனி அவ்வளவுதான்.

[அதிகாரி மேடையின் வலதுபுறமாகச் சென்றுவிடுகிறான். சிறுவன் ரொட்டிப் பொட்டலத்தோடு விலக அவனோடு சிறுமியும் நகர்கிறாள். ஆணும், இளம்பெண்ணும் சற்று விலகி நடக்கிறார்கள். கிழவி வேக மாய் வந்து சிறுவனிடமிருந்து பொட்டலத்தைப் பிடுங்க முயல்கிறாள். சிறுவன் அதைக் காப்பாற்றிக்கொள்ள பெரிதும் முயல்கிறான். திமிறு கிறான். கிழவி வெறியோடு பிடுங்க முயற்சிக்கிறாள். சிறுமி, சிறுவ னுக்கு உதவுகிறாள். கிழவி பிடுங்கவே முனைகிறாள். ஆண் ஓடிவந்து சிறுவனுக்கு உதவ முனைகிறான்.]

சிறுவன்: [ரொட்டிப் பொட்டலத்தைக் காப்பாற்ற முயன்றபடி] விடுங்கள் விடுங்கள். பசிக்கிறது. ரொட்டி வேண்டும்.

சிறுமி: [சிறுவனுக்கு உதவியபடி] பசிக்கிறது. ரொட்டி. ரொட்டி வேண்டும்.

கிழவி: [ரொட்டிப் பொட்டலத்தை பிடுங்க முனைந்தபடி] எனக்கு வேண்டும் எனக்கு வேண்டும்.

ஆண்: [சிறுவனுக்கு உதவியபடி] விடு கிழவி. கிழவி விடு. பாவம் குழந்தைகள் கிழவி விடு.

[ஆண் சிறுவனுக்கு உதவ முயன்றும், கிழவி வேகமாகவும், மூர்க்க மாகவும் செயல்படுகிறாள். சிறுவனிடமிருந்து ரொட்டிப் பொட்ட லத்தை அவள் பிடுங்கிக்கொள்கிறாள். வேகமாய் தன் இடத்தில் சென்று அமர்கிறாள். சிறுவனும் சிறுமியும் ஏமாற்றம் கொண்டு மெல்ல அழத் துவங்குகிறார்கள். அழுதபடியே அவர்கள் மேடையின் இடதுபுறமாக மெதுவாக வெளியேறுகிறார்கள். ஆண் தளர்வாய் ஓரமாய் சென்று நிற்கிறான். கிழவி பொட்டலத்தைத் திறந்து ரொட்டி யைச் சாப்பிடுகிறாள். ரொட்டியைச் சாப்பிட்டுவிட்ட கிழவர், பொட்ட லத்தைக் கசக்கி எறிகிறார். ரொட்டிப் பொட்டலத்தை வைத்திருக்கும் இளைஞனின் அருகில் நிற்கிறாள் இளம்பெண்.

அமைதி நிலவுகிறது.

ஆண் மெதுவாக கிழவி அருகே சென்று நிற்கிறான். அவள் ரொட்டியை முழுக்க சாப்பிட்டுவிட்டு, பொட்டலத்தைக் கசக்கி எறி கிறாள். மெல்ல தலையுயர்த்தி ஆணைப் பார்க்கிறாள். சிரிக் கிறாள்.]

ஆண்: (கிழவியிடம்) சிரிக்காதே. (கிழவி சிரிப்பதை நிறுத்திக் கொள்கிறாள்) உன் செயல் நியாயமற்றது.

கிழவி: (ஆணிடம்] என்ன தவறு செய்தேன் நான்? ம்?

ஆண்: [கிழவியிடம், கடுமையாக] மனிதத் தன்மையற்ற பேராசைக்காரியாக அல்லவா நடந்துகொண்டாய்? கையில் உணவோடு இலை வைத்துக் கொண்டு, அதைச் சாப்பிடாமல், பசியால் தவித்த சின்னக் குழந்தை களின் உணவைப் பறித்த மிருகம் அல்லவா நீ.

கிழவி: [ஆணிடம், கோபமாக] நாக்கை அடக்கிப் பேசு. நான் எச்சிலை உண்டு நீ பார்த்திருக்கிறாயா? ம்? [எழுகிறாள்] நான் எப்போதாவது எச்சிலை சாப்பிட்டிருக்கேனா? [தனக்குள்] மடையன். [குனிந்து இலை யைக் கையில் எடுத்துக் கொள்கிறாள்]

ஆண்: [கிழவியிடம்] மரியாதையாகப் பேசு.

கிழவி: [தனக்குள், இளக்காரமாய்] சரிதான்.

ஆண்: [கிழவியிடம், இளக்காரமாய்] அந்த இலை எப்போது உனக்கு எச்சிலை ஆனது?

கிழவி: [ஆணிடம்] இதுகூடதெரியாத உன்னை மடையன் என்று சொல்லாமல் என்ன சொல்வது?[தனக்குள்] மடையன் [அவசரமாக குப்பைத் தொட்டியை நோக்கி நடக்கிறாள். குப்பைத்தொட்டி அருகே, கையிலிருக்கும் இலை யைப் போடுகிறாள். குப்பைத் தொட்டியில் குனிந்து) ஓர் இலைகூட நல்ல இலையாய் இல்லாத இந்தக் குப்பைத் தொட்டியின் இலையி லிருக்கிற உணவை நான் சாப்பிட வேண்டுமாம். சொல்கிறான். (அவள் குப்பைத் தொட்டியில் இருக்கிற இலைகளை ஒவ்வொன்றாய் எடுத்து வெளியே வீசுகிறாள்.) ஒன்றாவது நன்றாக இருக்கிறதா? இல்லை. (வெறி பிடித்தவள்போல் வேக வேகமாய் இலைகளை எடுத்து மேடை யெங்கும் வீசுகிறாள். அந்த இலைகளில் பல இலைகள் ஈரமாக இருக் கின்றன. கிழவி நிமிர்ந்து எல்லோரிடமும்) எத்தனை இலைகள். எத்தனை இலைகள். எல்லாம் எச்சிலைகள். [சற்று நிதானமாய் நிற் கிறாள்) இன்னும் இருக்கின்றன இலைகள். (மெதுவாய் நடந்து சென்று தன் இடத்தில் அமர்கிறாள்.)

[அமைதி நிலவுகிறது.

ஆண் மெதுவாய் நடந்துவந்து முன்னே நிற்கிறான். இளைஞன் மெது வாக பொட்டலத்தைப் பிரிக்கிறான். இளம்பெண்ணிடம் ரொட்டியை எடுத்து நீட்டுகிறான். அவள் சிறிது அல்லது அறுக்கப்பட்ட சில பிரிவு களை வாங்கிக்கொள்கிறாள். அவள் மெல்ல நடந்து ஆண் அருகே செல்கிறாள். அவனிடம் ரொட்டியின் சிறு பகுதியை அல்லது சில பிரிவுகளை நீட்டுகிறாள்.]

இளம்பெண்: [ஆணிடம்] இதோ, வாங்கிக்கொள்ளுங்கள்.

ஆண்: [இளம்பெண்ணிடம்] இல்லை. வேண்டாம். நான் சாப்பிடப் போவ தில்லை. வீணாகும்.

இளம்பெண்: [ஆணிடம்] வைத்துக்கொள்ளுங்கள்.

[ஆணின் கையில் ரொட்டியின் ஒரு பகுதியை அல்லது சில பிரிவுகளை வைக்கிறாள். நடந்து சென்று இளைஞனின் அருகில் நிற்கிறாள். ஆண், கையில் ரொட்டியோடு மெல்ல நடைபோட்டபடி இருக்கிறான். அவனையே பார்த்தபடி இருக்கிறார்கள் இளைஞனும், இளம்பெண்ணும். வேகமாய் நடந்து, குப்பைத் தொட்டியில் ரொட்டியைப் போடு கிறான் ஆண்.]

இளம்பெண்: (அதிர்ந்து, ஆணை நோக்கி) ஏன்? ஏன் இப்படி செய்தீர்கள்? (ஆண் மெதுவாக நகர்ந்து மௌனமாய் நிற்கிறான். அவள், இளைஞனிடம் சோர்வாய்) மிகவும் அவமானமாக இருக்கிறது.

இளைஞன்: [இளம்பெண்ணிடம்] கலங்காதே. (இளம்பெண்ணிடம் தன்னிடமிருந்த ரொட்டியை நீட்டுகிறான்] வாங்கிக்கொள். [அவள் வாங்கிக்கொள்கிறாள்] சாப்பிடு. [அவள் சாப்பிடத் துவங்கும்போது] பகிர்ந்துகொள்வோம்.

இளம்பெண்: [ரொட்டியின் ஒரு பகுதியைச் சாப்பிட்டபடி, இளைஞனிடம்] உணவை?

இளைஞன்: [இளம் பெண்ணிடம்] உணவை. [சற்றுக் கழித்து] கனவுகளை [சற்றுக்கழித்து) வாழ்வை.

இளம்பெண்: (இளைஞனைக் கவனிக்காமல், சாப்பிட்டபடி, தனக்குள்) சுவையாகத்தான் இருக்கிறது. [சற்றுக் கழித்து, இளைஞனைப் பார்த்து] உண்மையில் நம்புவாயா? மீண்டும் வாழ்வோமா?

இளைஞன்: (இளம்பெண்ணிடம்) வாழ்வோம். நிலைக்கும் என்ற நம்பிக்கையில். (இளைஞன் மெல்ல நடைபோடுகிறான்.)

இளம்பெண்: (தனக்குள்) வாழ்வோம். (இளைஞனிடம்) அச்சமாக இருக்கிறது. சாத்தியமா?

இளைஞன்: (இளம்பெண் அருகில் நின்று) அனேகமாய் சாத்தியப்படும். (இளைஞன் நடைபோடுகிறான். தனக்குள்) இப்போது சற்று ஆறுதலாகத்தான் இருக்கிறது. (இளம்பெண்ணிடம்) காத்திருப்பது. (தனக்குள்) ஆறுதலாக ஒரு துணை இருப்பது நம்பிக்கையானதுதான். (தன் இடத்தில் நிற்கிறான்.)

ஆண்: (சற்று அதிக நேரம் கழித்து, பொதுவாக) நம்பிக்கொண்டிருக்க முடியாது. (சற்றுக் கழித்து, எல்லோரிடமும்) பிணங்கள் வரும் வரை இனியும் நம்பிக்கொண்டிருக்க முடியாது. இனியும் நாம் போகவேண்டியதுதான்.

(பின்னணியில் நோயாளியின் முனகல் ஒலி கேட்கிறது. எல்லோ... கவனமுறுகிறார்கள். மேடையின் இடதுபுறத்திலிருந்து நோ...

முனகலுடன் மெல்ல தளர்வாய் தள்ளாடியபடியே வருகிறான். ஆண் பதற்றத்துடன் நோயாளியின் அருகில் செல்கிறான்.)

ன்: (நோயாளியிடம், பதற்றத்துடன்) நோயாளி. நோயாளி. என்ன ஆயிற்று? நோய் அதிகமாகிவிட்டதா?

(நோயாளி, ஆணை ஒருமுறை பார்த்துவிட்டு மெல்ல தள்ளாடியபடியே நடக்கிறான். மெல்லக் குனிந்து கீழே இருக்கும் ஓர் இலையை எடுக்கிறான். கீழே போடுகிறான்.

ளி: (நோயாளியை நோக்கி) நோயாளி, நோய் வாட்டுகிறதா?

(நோயாளி முனகலுடன் குப்பைத் தொட்டியின் அருகில் சென்று நிற்கிறான். குப்பைத்தொட்டியில் மெல்ல தளர்வாய்க் குனிகிறான். சில இலைகளைப் புரட்டுகிறான். ஓர் இலையை மடித்தபடி எடுக்கிறான். மெல்ல நிமிர்ந்து முனகலுடன் தளர்வாய் தள்ளாடியபடியே நடந்து, மேடையின் இடதுபுறமாக வெளியேறுகிறான். அவனுடைய முனகல் சுமார் இருபது வினாடிகள் நீடிக்கிறது. அது மெல்ல பலவீனமாய்க் கரைந்து நிற்கிறது.

அமைதி நிலவுகிறது.)

ம்பெண்: (தனக்குள்) இனி என்ன? சோர்வான வறண்ட வாழ்வுதானா?

(இளம்பெண் கையிலுள்ள மாலைகளை உற்றுப் பார்க்கிறாள். ஒரு மாலையை தனியே எடுக்கிறாள். பிறகு, மெல்ல அதன் இதழ்களைப் பறித்து உதிர்க்கிறாள்.)

ஞன்: (அதிர்ந்து இளம்பெண்ணிடம்) என் இப்படி செய்கிறாய்?

ம்பெண்: (இதழ்களைப் பறித்து உதிர்த்தபடியே) காய்ந்துவிட்டன. எதற்கு வீண் சுமை.

ஞன்: (இளம் பெண்ணிடம்) இருப்பினும் பயன்படும்.

ளி:( இளம்பெண்ணை நோக்கி அதட்டலாய்) குப்பை போடாதே. பைத் தியம்.

ம்பெண்: (தனக்குள்) குப்பை. (அவள் கையிலுள்ள மற்றொரு மாலையை எடுக்கிறாள்.)

ஞன்: (இளம்பெண்ணிடம்) வேண்டாம். கேள். அது இருக்கட்டும்.

ம்பெண்: (இளைஞனிடம்) வேண்டாம் அது. சுமை. காய்ந்தது வேறு. ருங்காலமாய்.

ஞன்: (இளம் பெண்ணிடம்) உனக்கென்ன, நான் சுமக்கிறேன். கொடு. ளிடம். (கையை நீட்டுகிறான்.)

ம்பெண்: (சற்றுக் கூர்ந்து, தனக்குள்) இருக்கட்டும், என்னுடனேயே.

(மேடையின் வலதுபுறத்திலிருந்து காவல்காரர்கள் (Policemen) ஒரு Stretcherஐத் தூக்கிக்கொண்டு வருகிறார்கள். அதன்மீது அதன் முழு நீளத்திற்கு, கந்தலாக வெள்ளைத் துணி போர்த்தப்பட்டுள்ளது. இந்த வரவைக் கண்டு மேடையில் உள்ள எல்லோரும் அதிர்ந்து போகிறார்கள். கிழவியும் கிழவரும் எழுந்துகொள்கிறார்கள். காவல்காரர்கள் அந்த Stretcherஐ மேடையின் இடதுபுறமாக வைக்கிறார்கள்.)

கிழவி: (காவல்காரனை நெருங்கி, பதற்றத்துடன்) கிடைத்துவிட்டதா? என் மகன்தானா? என் மகன்தானா. Stretcher-ன் அருகில் போகிறாள்.)

கிழவர்: (காவல்காரர்களிடம், மெல்லிய துக்கத்துடன்) கொண்டுவந்துவிட்டீர்களா? என் மனைவியா? (Stretcher-ன் அருகில் போகிறார்.)

(இளைஞன், இளம்பெண், ஆண் ஆகியோரும் Stretcher-ஐ நெருங்குகிறார்கள்)

காவல்காரன் 1: (எல்லோரிடமும்) யாரும் அருகில் வராதீர்கள். வராதீர்கள்.

காவல்காரன் 2: (எல்லோரிடமும்) இன்னும் சில வர உள்ளன. அதுவரை யாரும் நெருங்கவேண்டாம்.

(மெல்ல Stretcherகளை நோக்கி நகர்ந்த கிழவி, கிழவர், ஆண், இளைஞன், இளம்பெண் ஆகியோர் மெதுவாக பின்னே சென்றுவிடுகிறார்கள். காவல்காரர்கள் மேடையின் வலதுபுறமாக வெளியேறுகிறார்கள். சில விநாடிகளில் மற்றொரு Stretcher-ஐக் கொண்டு வருகிறார்கள். அதன்மீதும், அதன் முழு நீளத்திற்கு, வெள்ளைத் துணி கந்தலாகப் போர்த்தப்பட்டுள்ளது.அந்த Stretcherஐ மேடையின் நடுவில், அவர்கள் வைக்கிறார்கள். மீண்டும் அவர்கள் மேடையின் வலதுபுறமாக வெளியேறுகிறார்கள். மீண்டும் அவர்கள், வெள்ளைத் துணி போர்த்தப்பட்ட ஒரு Stretcher-ஐக் கொண்டுவந்து மேடையின் வலதுபுறமாக வைக்கிறார்கள். மீண்டும் அவர்கள் வெளியேறி, மீண்டும், வெள்ளைத் துணி போர்த்தப்பட்ட மற்றுமொரு Stretcherஐக் கொண்டுவந்து மேடையின் இடப்பகுதியில் வைக்கிார்கள். மீண்டும் காவல்காரர்கள் வெளியேறுகிறார்கள். மேடையில் மெல்ல ஒளி குறைகிறது. மெல்லிய ஒளியாக நீடிக்கிறது. காவல்காரர்கள் மீண்டும் வெள்ளைத்துணி போர்த்தப்பட்ட ஒரு Stretcher-ஐக் கொண்டுவந்து மேடையின் வலப்பகுதியில் வைக்கிறார்கள். மொத்தம் ஐந்து, வெள்ளைத் துணி போர்த்தப்பட்ட Stretcher கள் மேடையில் உள்ளன. காவல்காரர்கள் மேடையின் வலது ஓரமாக நிற்கிறார்கள். மேடையில் மெல்லிய ஒளி இருக்கிறது. ஒளி, மேடையின் பக்கவாட்டிலிருந்து பாய்கிறது. சில விநாடிகளுக்கு அமைதி நிலவுகிறது).

கிழவர்: (காவல்காரனை நோக்கி) இப்போது நாங்கள் பார்க்கலாமா?

காவல்காரன் 1: (காவல்காரன் 2 இடம்) மிகவும் கடுமையாகப் போராடித் தோண்டி மீட்கப்பட்டப் பிணங்கள் இல்லையா? சோர்வு வேறு.

காவல்காரன் 2: (காவல்காரன் 1 இடம்) பின்னே என்ன? கடுமையான சோர்வு. எவ்வளவு ஆழத்திற்குத் தோண்டவேண்டியிருந்தது. எவ்வளவு சிரமம்? ஆனாலும் மீட்க முடிந்ததே.

கிழவி: (அதிர்ந்து, காவல்காரர்களிடம்) நான் இப்போது பார்க்கப் போகிறேன்.

காவல்காரன் 1: (பொதுவாக, அசிரத்தையாக) யாரும் உங்களைத் தடுக்கவில்லை.

இளைஞன்: (இளம்பெண்ணிடம்) ஒளி குறைந்துவிட்டது. அடையாளம் தெரியுமா?

கிழவர்: (மெதுவாக) ஒளி வரும்வரை காத்திருக்க இயலாது.

கிழவி: (தனக்குள்) நானே துவக்குகிறேன். (Stretcherகளை நெருங்கி) இங்கு யார் என் மகன்?

கிழவி மெல்ல மேடையின் வலதுபுறமுள்ள ஒரு Stretcher-ன் அருகில் குனிகிறாள். அதன் மீதுள்ள வெள்ளைத்துணியை மெல்ல சிறிதளவு விலக்குகிறாள்.)

கிழவி: (அதிர்ந்து) ஓ. கொடுமை. கொடுமை. (நிமிர்கிறாள். சோகமாய் தனக்குள்) மிகக் கொடுமை. (சற்றுக் கழித்து) முகம் சிதைந்து, அடையாளம் இழந்து. (சற்றுக் கழித்து மற்றவர்களிடம் அந்த Stretcher-ஐக் காட்டி) யாருக்கு உறவோ? (துக்கமாய் தலையாட்டிக் கொள்கிறாள்.)

(கிழவி, மெல்ல நகர்ந்து மேடையின் வலதுபுறமேயுள்ள மற்றொரு Strecher அருகில் சென்று, அதன் மீதுள்ள வெள்ளைத்துணியை சிறிது விலக்குகிறாள். கிழவர் நகர்ந்து மேடையின் இடதுபுறமுள்ள Stretcher அருகில் செல்கிறார். மெல்லக் குனிகிறார். அந்த Stretcher-ன் மீதுள்ள வெள்ளைத் துணியை சற்று விலக்குகிறார். அதிர்ந்து துக்கமாய் நிமிர்கிறார். கிழவி வேதனையோடு நிமிர்கிறாள்.)

கிழவர்: (துக்கத்துடன்) என்ன இது வேதனை? (சற்றுக் கழித்து) ஆணா பெண்ணா என்று அறிய முடியாதபடியான குலைவு...

கிழவி: [தனக்குள்] உடல் முழுக்க அழிந்து...
[மெல்ல நகர்கிறாள்.]

[ஆண் மேடையின் இடதுபுறமுள்ள மற்றொரு Stretcher-ன் அருகே செல்கிறான். இளைஞனும் இளம்பெண்ணும் மெல்ல நகர்ந்து முன்னே வருகிறார்கள். இளம்பெண்ணும் மேடையின் இடதுபுறமுள்ள Stretcher அருகே குனிகிறாள். ஏற்கனவே சிறிது வெள்ளைத்துணி விலக்கப்

பட்டுள்ள அந்த Stretcher-ஐக் குனிந்து கவனிக்கிறாள். ஆண் இடதுபுறமுள்ள மற்றொரு Stretcher மீதுள்ள வெள்ளைத் துணியை சிறிது விலக்கிப் பார்க்கிறான். இளைஞன் நகர்ந்து மேடையின் நடுவில் உள்ள Stretcher அருகே சென்று குனிகிறான். அதன் மீது போர்த்தப்பட்டுள்ள வெள்ளைத் துணியை சற்று விலக்குகிறான். அவன் மெல்ல எழுகிறான். கிழவர் நகர்ந்து மேடையின் வலதுபுறமுள்ள வெள்ளைத்துணி சற்று விலக்கப்பட்டுள்ள Stretcher அருகே சென்று குனிந்து கவனிக்கிறார். கிழவி இடதுபுறமாக நகர்கிறாள்]

இளைஞன்: [பொதுவாக] மோசம்தான். [சற்றுக் கழித்து துக்கத்துடன்] விழிகளில்லை...

ஆண்: [சற்றுக் கழித்து, பொதுவாக] மூக்கு இல்லை.

இளம்பெண்: [எழுந்துகொண்டு, பொதுவாக, துக்கத்துடன்] முகமே இல்லை

கிழவி: (மேடையின் இடதுபுறமுள்ள Stretcher அருகே குனிந்து பார்த்து எழுந்து, பொதுவாக, துக்கத்துடன்) எந்த சுவடுமில்லை.

(கிழவி, ஆண், கிழவர், இளம்பெண்,"இளைஞர் ஐவரும், ஒவ்வொருவராக, மேடையிலுள்ள ஐந்து Stretcher-களின் அருகிலும் சென்று குனிந்து கவனித்து, ஏமாற்றத்துடன் சோர்வாய் எழுகிறார்கள். மெதுவாக நடைபோடுகிறார்கள். ஒருவரையொருவர் மெதுவாய் கடந்து கொள்கிறார்கள். எதிர்பட்டுக் கொள்கிறார்கள்.)

கிழவி: (தனக்குள்) என் மகன் இல்லை இதில்.

ஆண்: (பொதுவாக) இவற்றில் நம் யாருடைய உறவினரும் இல்லை.

இளைஞன்: (மொதுவாக) யாருமே இல்லை இவற்றில்.

இளம்பெண்: (பொதுவாக] அனைத்தும் அடையாளம் சிதைந்த உடல்கள்.

கிழவர்: (பொதுவாக) பொருள் தர இயலாமல் நம்மை முட்டாளாக்கும் பிணங்கள்.

கிழவி: (தனக்குள்) அல்லது, இவற்றில் ஏதாவது ஒன்றுதான் என் மகனா? (மேடையில் மெல்ல ஒளி அதிகரிக்கிறது.)

ஆண்: (கிழவரிடம்) வெளிச்சம் வந்துவிட்டது.

இளைஞன்: (ஆணிடம்] என்ன வேறுபாடு இருக்கப் போகிறது?

[கிழவி வேகமாய் மேடையில் உள்ள ஒவ்வொரு Stretcher அருகிலும் சென்று குனிந்து கவனித்து நகர்கிறாள்.]

கிழவி: (எல்லோரிடமும்) அடையாளத்தின் சுவடே இல்லாத பிணங்கள் காவல்காரனின் அருகில் வேகமாய் சென்று நின்று, கோபமாக) இத்த

நேரம் எங்களைக் காக்கவைத்து, முகத்திலோ, உடலிலோ எந்தக் குறிப்பும் இல்லாத உடல்களைத்தான் கொண்டுவர முடிந்ததா உங்களால்?

வல்காரன் 1: (கிழவியிடம்) எங்கள் நோக்கம் அதுவல்ல. மேலும், கடுமையாக முயன்று இவற்றை நாங்கள் மீட்டு வந்துள்ளோம்.

ண்: (காவல்காரர்களை நெருங்கி, அவர்களிடம்)என்ன பயன்? அனைத்தும் வெறும் பிண்டங்கள்.

வல்காரன் 2: (ஆணிடம்) பலகாலம் மண்ணில் புதைந்து கிடந்தவை. அனைத்தும் இதேபோன்றுதான் வெளிவருகின்றன.

ழவி: (தனக்குள்) இறுதிவரை என் மகன் கிடைக்கமாட்டானா? அவன் உடலை நான் காணவே இயலாதா? [மெல்ல நகர்ந்து தன் இடத்தில் சென்று அமர்கிறாள். அழுகிறாள். காவல்காரர்களை நோக்கி,கோபமாய், Stretcher-களைச் சுட்டிக் காட்டி] இவைகளை உடனே எடுத்துச் செல்லுங்கள். [தனக்குள்] இவற்றோடு வாழ இயலாது.

வர்: [காவல்காரர்களிடம்] சீக்கிரம்.

[காவல்காரர்கள் மெதுவாக நகர்ந்து, முதலில் மேடையின் வலதுபுறமுள்ள Stretcher-ஐத் தூக்கிக் கொண்டு மேடையின் வலதுபுறமாக வெளியேறுகிறார்கள். அவர்கள் திரும்பி வந்து, ஒவ்வொரு Stretcher ஆகத் தூக்கிக் கொண்டு வெளியேறுகிறார்கள். அவர்கள் அவ்வாறு இயங்கிக் கொண்டிருக்கையில், கிழவி கீழே குனிந்தபடி இருக்கிறாள்; ஆண், கிழவர், இளம்பெண், இளைஞன்—ஆகியோர், ஒருவரிடம் ஒருவர் விடைபெறுகிற வகையில் பேசிக் கொள்கிறார்கள்.]

வர்: (எல்லோரிடமும்) இனி நாம் நகர வேண்டியதுதான். (இளைஞன் அருகே சென்று] நான் போகட்டுமா? [இளம்பெண்ணிடம்] போகிறேன்.

ளைஞன்: [கிழவரிடம், இளம்பெண்ணைக் குறிப்பிட்டு] சரி, நாங்களும் விடைபெறுகிறோம்.

ளம்பெண்: (கிழவரிடம்) செல்கிறோம். (ஆணிடம்) விடைபெறட்டுமா?

ண்: [இளைஞன், இளம்பெண், கிழவர்—ஆகியோரிடம்) சரி நானும் நகர்கிறேன். [சற்றுக் கழித்து, தனக்குள்] நாம் அனைவரும் மீண்டும் சந்திக்கப் போகிறோமோ, இல்லையோ.

வர்: [சற்றுக் கழித்து, ஆணிடம்] இருப்பினும் நாம் பிரிவோம். போகட்டுமா?

ண்: (கிழவரிடம்) சரி.

[கிழவர், ஆண், இளைஞன், இளம்பெண் ஆகியோர், இப்போது, கீழே குனிந்தபடி அமர்ந்திருக்கும் கிழவியைப் பார்க்கிறார்கள். அவள் அருகில் செல்கிறார்கள்.]

ஆண்: [கிழவியிடம்] கிழவி, நாங்கள் போகிறோம்.
[கிழவி பேசாமல் இருக்கிறாள்]

கிழவர்: (கிழவியிடம்) நாங்கள் நகர்கிறோம்.

இளம்பெண்: (கிழவியிடம்) செல்கிறோம்.

இளைஞன்: (கிழவியிடம்) போகிறோம்.

கிழவி: (தனக்குள் சிரித்து) மகிழ்வாய் இருக்கும் என்று கனவு கண்டாலும், எல்லோரும் எரிக்காதவர்கள்தானே.

ஆண்: (கிழவியிடம்) நாங்கள் போகிறோம். நீ வரவில்லையா?

கிழவி: (ஆணைப் பார்க்கிறாள். எல்லோரையும் பார்க்கிறாள். மெல்ல எழுகிறாள். எல்லோரிடமும்) மாற்றம் தேவைதான்...உங்களுடன் நானும் இங்கிருந்து போவது பாதுகாப்பாகத்தான் இருக்கும். (தனக்குள்) யாருமே சாட்சியாய் இருக்கவில்லை என்று.

[பின்னணியில் நோயாளியின் முனகல் ஒலி இலேசாய்க் கேட்கிறது. எல்லோரும் கவனமுறுகிறார்கள்.]

ஆண்: (எல்லோரிடமும்) இனி நாம் நடப்போம். இங்கு இருப்பதில் பொருளில்லை.

[ஆண், கிழவர், இளைஞன், இளம்பெண், கிழவி ஐவரும் மெதுவாக நடக்கிறார்கள். அவர்கள் மேடையின் இடதுபுறமாக வெளியேறுகிறார்கள்.

நோயாளியின் முனகல் ஒலி அதிகமாகக் கேட்கிறது. மேடையின் இடதுபுறத்திலிருந்து நோயாளி மெதுவாக வருகிறான். அவன், நடைபாதையின்மீது மெதுவாக அமர்கிறான். உரக்க முனகியபடியே இருக்கிறான். தன் இடதுபக்கமாக, பக்கவாட்டில், பார்வையாளர்களை நோக்கியபடி படுத்துக்கொள்கிறான். ஏதோ வலி இருப்பது போல துடித்துக்கொண்டும் முனகிக் கொண்டும் இருக்கிறான்.

சுமார் இருபத்தைந்து வினாடிகள் நகர்கின்றன. மேடையில் ஒளி குறைந்து இருளாகிறது. (நோயாளியின் முனகல் ஒலி மெல்ல குறைகிறது)]

—திரை—

# புதுவையில் முகமூடி மற்றும் ஒப்பனைப் பயிற்சி முகாம்

—ச. விஜயசாமி

டந்த சனவரி, பிப்ரவரி மாதங்களில் புதுவை கலை இலக்கிய பெருமன்றத்தின் ார்பில் முகமூடி மற்றும் ஒப்பனைப் பயிற்சி முகாம் ஒன்று புதுவையில் டைபெற்றது. இதில் பயிற்சியாளர்களாக தமிழகத்தின் பல்வேறு பகுதிகளி ருந்தும் சுமார் இருபத்தைந்து பேர்கள் கலந்து கொண்டார்கள்.

ன்று நாள் நடந்த இப்பயிற்சி முகாமை புதுவை கலை இலக்கிய பெருமன்ற லைவர் எம். கே. ராமன் அவர்கள் துவக்கி வைக்க மரபுவழி முகமூடி பயிற்சி ளித்த அழகர்சாமி வாத்தியார் அவர்களின் மேற்பார்வையில் களிமண் ாண்டு விலங்கு மற்றும் மனித முகங்களை எவ்வாறு உருவாக்குவது என்பது றித்து பயிற்சியளிக்கப்பட்டது. இதன் மூலம் பயிற்சியாளர்களிடமிருந்து டு, குதிரை, மனிதன், குரங்கு போன்ற பல்வேறு பொய்முகங்கள் உருவாக் பட்டன. அவற்றின் உதவியால் வடிக்கப்பட்ட முகமூடிகள் வண்ணங்களின் தவியால் மெருகேற்றப்பட்டு இறுதி நாள் காட்சிக்காக வைக்கப் டன.

ண்டாம் நாள் ஒரு மனிதனின் முகத்தை அவ்வாறே எவ்வாறு வார்ப் டுப்பது என்பதற்கான பயிற்சியும், எளிமையான முறையிலும் விரைவாகவும் வாறு ஒரு தாளைக் கொண்டு வெட்டியெடுப்பது என்பது குறித்தும் பலூன் ன்ற பொருட்களை உபயோகித்து எவ்வாறு முகமூடி தயாரிப்பது என்பது த்தும் காலை நேர பயிற்சியாக அமைந்தது. உணவு இடைவேளைக்குப் னர் புரிசைக் கண்ணப்ப தம்பிரான் வாரிசான கண்ணப்ப சம்பந்தன் ர்கள் நமது பாரம்பரிய நாடகமாகக் கண்டறியப்பட்ட தெருக்கூத்தின் னையைப் பற்றி தெளிவாக விளக்கியும் கோடுகளின், வண்ணங்களின் மைகளைப் பற்றியும் காட்டுக்கு முகப்பூச்சு செய்து காட்டியும் வகுப்பை த்தினார். அதன் பின்னர் புதுவைப் பல்கலைக்கழக ஸ்ரீ சங்கரதாஸ் மிகள் நாடகப்பள்ளி இன்ஸ்ட்ரக்ட்டராகப் பணிபுரியும் திரு. ஆறுமுகம் ர்கள் வண்ணக் கலவையைக் குறித்து நடத்தினார்.

ராம் நாளாக, அதே பள்ளியைச் சார்ந்த விரிவுரையாளர் முனைவர் ாமசாமி அவர்கள் நவீன நாடகத்தில் இன்றைய பிரச்சினைகளாக எதிர் ள வேண்டியவைகளையும், அடுத்த கட்டமான ஒரு நிலைக்கு நாடகத் தேடலின் முக்கியத்துவத்தையும் அரசியல் பின்னணியோடு விளக் ர்.

இதன் ஒட்டுமொத்த பயிற்சியானது முனைவர் கே. ஏ. குணசேகரன் மே பார்வையில் திரு. வேலு சரவணன், திரு. சி. அண்ணாமலை, திரு. கார்த் ஷிபு, எஸ். கொட்டாரம் ஆகியோர்களைக் கொண்டு முகமூடி ஒப்ப குறித்த பயிற்சிகளைக் கொடுத்ததோடு அல்லாது பயிற்சி முகாமை செவ் நடத்தியமை இந்த இளைஞர்களையே சாரும்.

ஒட்டுமொத்தமாக நவீன நாடகம் குறித்த இதுபோன்ற இளைஞர்களால் குறைபாடுகள் (திட்டமிடுதலில்) இருப்பினும் இக்குறைந்த காலத் செவ்வனே நடத்திக் காட்டியமை எதிர்கால தமிழ் நவீன நாடக வளர்ச் இளைய சமுதாயத்தினரின் எழுச்சியை முனைவர் கே. ஏ. குணசேக மூலமாக அறிய முடிந்தது.

---

நாடக விமர்சனம்

## 1. மிருகம்

சி. அண்ணாம

நல்ல நாடகங்களைத் தமிழில் பார்த்துவிட எண்ணி வாசகங்க கண்டாலே துடிதுடித்துப் பரவசமாகும் பார்வையாளர்கள். ஆனால், மு உறவுகளில், ஆக்கப்பூர்வ சேர்க்கைகளில் முகிழ்ந்து மலரக்கூடிய நாட படைப்புகளோ, அரைகுறைப் பிரசவங்களாய், அழுகி—சருகாகி—அண்ட யில் சிறுதூசி என்கிற வஸ்துவுக்குக்கூட உபயோகமற்று மறைந் கின்றன. புதிய படைப்புகள் என்று உருவாகும் நாடகங்கள், எங்கெங் எடுத்து ஒட்டத் தெரியாமலும், வெட்டத் தெரியாமலும் அரைவேக்காட மனதிற்குள் நுழைய மறுத்து தலைவலியோடு ஓடஓட விரட்டுகிற வெ களாய் வடிவெடுத்தாலும், மீண்டும் மீண்டும் தேடி செலவு என்கிற பிர யற்று ஆவலாய் வருகிற பார்வையாளர்கள் அவமானங்களோடு திரு செல்கையில், அரங்கில் படைப்பின் உன்னதம் பற்றி சிலர் பெருமை கொண்டிருக்கிறார்கள். இத்தன்மைகளைத் தாண்டி உருவாகும் ஒ படைப்புகளும் தனிப்பட்ட விரோதங்கள், பரவலின்மை இவைகளால் தெரியாமல் போய்விடுகின்றன. தமிழில் உருவான பத்து சிறந்த படைப் தமிழகமெங்கும் நிகழ்த்தப்படுமானால், குருட்டுப் பார்வையில் பலத்த ஏற்படும்.

பாண்டிச்சேரியில் சில நல்ல படைப்புகள் உருவாகின. அவற்றை தே யோடு வரவேற்று முன்னெடுக்க வக்கற்றுப் போனதால் பல அ

டைப்புகள் பரிதாபகரமான சூழலுக்குள்ளேயே சுருண்டு போயின. ண்டிச்சேரி நாடகப்பள்ளி தந்த வேலு. சரவணனும், பேராசிரியை எம்.எஸ். ந்திமேரியும் உருவாக்கிய மிருகம் தமிழ்ச் சூழலுக்கு நல்ல படைப்பு என வேற்று பாராட்டவேண்டியுள்ளது. படைப்பிற்கான அவர்களின் ஈடுபாட்டை ற்சாகத்தை போற்றத்தான் வேண்டும். கிடைத்த சிறு இடத்தை ஒத்திகைக் ளாகப் பாவித்து, நாடக ஆக்கம், மேடை—அரங்கப் பொருட்கள், முடிகள், ஆடைகள்... எல்லாமே இருவர்தான்.

ந்தைகளின் மனப் பிரச்சினையின் அடிநாதமாய் படரும் காட்சிப் பின்னணி க் கொண்டது மிருகம். மக்கள் கூட்டத்தை வெறுத்தொதுக்கி, மிருகம், வயினங்களோடு உறவு கொண்டு தன் நிலையினைப் புலப்படுத்தும் ளின் கதறல்கள், காயங்கள், விருப்பங்கள், அழுகைகள் நாடகம் முழுவதும் விக்கிடக்கின்றன. நவீன யுகத்தில் நடைபெறும் முறைகேடுகளில், தகாத வுகளில், நிகழ்வுப் போக்குகளில் ஒட்டும் உறவும் கொள்ளமுடியாத மகன் லாவற்றையும் வெறுத்து, குரங்கு கேட்கிறான். நாய், கரடி என மரத் கு ஓடுகிறான். மனம் பூமியில் தங்க மறுக்கிறது. மரத்தில் ஆறுதலடை து. சமூகத்தைவிட மிருக—பறவையினங்கள் பரவாயில்லை என மரத்தை ட்டு இறங்க மறுக்கிறான் மகன் செல்வா. தாய் பரிதவிக்கிறாள். மரபார்ந்த யங்கள் தோற்கின்றன. அவனுக்கு புதிய அழைப்புகள் தேவைப்படு றன.

கத்தில், மிருகங்களின் முகங்களை, எலும்பு மனிதனை மரத்தில் தொங்க த் தக்க இடத்தில் நிலைநிறுத்தி அதனோடு உறவாடும்படியான ப்பு. நாய், கரடி, பெரிதான பொம்மைகள் என இடத்தைப் பயன்படுத்தி பிடத்தை உருவாக்கிய விதம் நன்றாக இருந்தது. மனநிலை உணர்வு ன் நிலைக்கேற்ப தரை, மரம் என்ற சூசகக் கற்பனைகள். மகனை உறங்க க்க சிறிய கட்டில், வீடு என்பதற்கு கொடி எல்லாமே வித்தியாசமாகப் ள. இசையின், ஒளியின் பங்களிப்பு இன்னும் தேவைப்படுகின்றது. று சம்பவங்களோடு நவீன கவிதைகளையும் இணைத்து உருவாக்கப் நாடகம் சில இடங்களில் உயிருக்காகத் தவிப்பதையும், தவறான யில் உருவாகும் உணர்வுப் பெருக்கங்களையும் தவிர்த்து இன்னும் க கால்களைப் பதிக்கவேண்டியுள்ளது மிருகம்.

ம் போன்ற முயற்சிகள் பரவலான நாடக அறிவை ஏற்படுத்த முடியும். இது வளருமெனில் நாடக உலகில் சாதகமான விளைவுகளைத் றுவிக்க முடியும். இயக்குநர் வேலு. சரவணனும், தயாரிப்பாளர் ஸ். காந்திமேரியும் பாராட்டுக்குரியவர்கள். □

## 2. ஒரு நடுக்கமான மீட்சிக்கு

முபீன்

நிஜந்தன் எழுதி, இயக்கிய இந்த நாடகம் அரூபம் நாடகக் குழுவின் இரண்டாவது முயற்சியாக மியூசியம் அரங்கில், மார்ச் 10ஆம் தேதி அன்று 7-00 மணிக்கு அரங்கேறியது.

அரைவட்ட மேடையை மூன்று ஒளிவட்டங்கள் மூன்று பாகங்களாகப் பிரித்திருந்தன. சீருடை அணிந்த நால்வர் ஒருவரை விசாரிப்பதாக மைய ஒளி வட்டப் பகுதியிலும், குரல் பாவனையிலிருக்கும் நடுவர் கொண்ட டென்னிஸ் விளையாட்டைக் காட்சியில் இல்லாத எதிர் ஆட்டக்காரருடன் விளையாடும் ஒரு டென்னிஸ் வீரர் இடப்பக்க ஒளிவட்டத்திலும், ஒரு டிக்டேட் செய்பவர்—ஒரு டைப்பிஸ்ட் வலப்பக்க ஒளிவட்டத்திலும் என நாடக நிகழ்ச்சிகள் இருந்தன.

தனக்குத் தெரிந்தும் தெரியாததை மறைக்கும் விசாரிக்கப் படுபவரிடமிருந்து தான் அறிந்தும் அறியாததை எதிர்கொள்ள எண்ணும் உக்கிரத்தில் விசாரிப்பவர்கள், வாழ்க்கையின் விசாரணையை நடத்திக் கொண்டிருந்தார்கள். வாழ்வு இயக்கத்திலிருந்து, வாழ்வுப் போராட்டத்திலிருந்து தொலைவாகிப் போன வெற்றியைக் கண்டுவிடத் துடிக்கும் துடிப்பு விசாரிக்கப்படுபவரிடம் இருந்திருக்க வேண்டும். அத்துடிப்பின் சிதறல்கள் மட்டுமே நடிப்பில் இருந்ததால் அது வெறும் கூட்டு இயக்கத்தின் வெற்றியாக, நாடக நிகழ்வின் அதிர்ச்சிகளுக்குப் பரிச்சயமாகாத பார்வையாளர்களுக்கு இருந்தது. விசாரித்தலும் சோர்வாகிப் போனபின் வாழ்வின் இயக்க வெற்றியைக் காணும் ஆவல் தோன்றிவிடுகிறது அவர்களுக்கு. இன்னும் தீவிரமான ஆழமான நடிப்பு வெளிப்படுத்தப் பட்டிருக்கவேண்டும்.

விளையாட்டு, வெற்றியை நோக்கித்தான் நகரும் என்னும் நம்பிக்கையில் வாழ்வை விளையாடும் டென்னிஸ் வீரன். தோல்வியின் பிரக்ஞைக்கு இலக்காகிப் போகிறான். இங்கும் போராட்டம் அத்துமீறல்களுக்கு எதிராகத் தொடர்கிறது. ஆனால் விளையாடித் தோற்பதைவிட விளையாடாமல் வெற்றியைக் கொடுப்பதே அவனுக்குத் தார்மீக பலமாக இருக்கிறது. தோல்வியை நோக்கித்தான் வாழ்க்கை விளையாடப்பட்டது என்னும் ஆதங்கம் எழ காட்சிப் படுத்தப்பட்டது.

விசாரணையையும், விளையாட்டையும் ஒரு பரிமாணத்திலேயே பதிவு செய்யும் டிக்டேட் செய்பவர், டைப்பிஸ்ட்டின் விமர்சனத்தை ஏற்காமல் இருப்பதன் மூலம் இறுகிப் போன வாழ்தலை நியாயப்படுத்துபவராகிறார். வாழ்க்கையின் சுகம் உறிஞ்சப்பட்டு விடுமோ என்னும் அவலத்தில் இவர்கள் வாழ்வு நகர்ந்து

கொண்டிருக்கிறது. விசாரித்தலும் விளையாட்டும் எப்படி நிகழ்ந்தாலும் பதிவு செய்தல் மட்டுமே முதன்மையாகிப் போவதை தவிர்க்க முடியாமல் ஏற்கிறார்கள் இவர்கள்.

வாழ்வின் வன்முறையை வாழ்தலின் வன்முறையை மூன்று பகுதிகளாகப் பிரித்துக் காட்டுகிற இந்நாடகப் பிரதி திணிக்கப்படுதல், அச்சுறுத்தல், அடக்கப்படுதல் எனும் வன்முறையின் செயல்தன்மைகளைக் காட்டியது. அதிகாரப் பிரயோகம் மேடையின் மூன்று பகுதிகளிலும் நிகழ்த்தப்பட்டது. போராட்டம் யாருக்குள் யாரிடம் போன்ற கேள்விகளைத் தொடர்ந்து எழுப்பிக் கொண்டிருந்தது இந்நாடகப் பிரதி. அடைபட்டுப் போன அதிகாரச் சிக்கல்களை மேடைப் பரப்பிற்கு எடுத்துவந்து உருவகப்படுத்தியது. போராட்ட மகிழ்வைப் பகிர்ந்து கொள்ளும் உற்சாக விளிம்பில் நின்று பேசவில்லை அந்த நடிகர்கள்.

அவலம் நிறைந்த மனிதத் தன்னிலையானது உறுதிபடுத்திக் கொள்ளும் இயக்கம், நாடகத்தின் உள்மொழியில் சிக்கியிருந்தது. இத்தன்னிலை வெளிப்படுத்தும் தவிர்க்க இயலாமை தொடர்ந்திருக்கும் தவிப்பு நிலையோடு நடிப்பால் உருவகப்படுத்தப்படவில்லை. மூடியிருக்கும் பாதைகளைக்கொண்ட சிக்கல் நிறைந்த வாழ்வில் இறுகிப்போன விதிகள் திணறடிப்பதை பேசுகிறது இந்நாடகப் பிரதி. மனித வாழ்வைநோக்கி அமைப்பினால் நீட்டப்படும் கேள்விகள் இந்நாடகத்தில் எதிரொலிக்கின்றன. மனித வாழ்நிலை எந்த முரணையும் சகித்துக்கொள்ளாத தடையைக் கொண்டிருப்பதை உரக்கக் கூறியது இந்நாடகம்.

பரிமாறிக்கொள்ள எதுவுமே தென்படாத உலகில் பரிமாறிக் கொள்ளும் கட்டாயத்தில் தள்ளப்பட்டிருந்ததை உணர்ந்து அதனால் சலிப்படையும் மன உணர்வு, நாடகப் பிரதி எதிர்பார்க்கும் அளவு நிகழ்த்தப்பட்ட பிரதி தரவில்லை. வசனத்தின் கனத்தை அனுபவித்து மௌனத்தின் அமைதியைத் தெளிந்து வசனங்கள் பேசப்பட்டிருக்கலாம். நாடகத்தில் நடித்த சில நடிகர்களுக்கே இந்த வகையான நடிப்பு கைவந்தது.

கால இட வெளி தொடர்பற்று இயங்கியது இந்நாடகம். நாடகத்தின் கதை காலம், உடன் நிகழ்கால கதையாடலாகப் பொருள்படுத்த இயலாத வகையில் அதன் வரலாற்றுக் காலம் உள்ளது. ஒளி அமைப்பு மேடையைப் புதிய முறையில் பயன்படுத்தியதாக இருந்தது. ஒலிக் குறைபாடு நாடகத்தின் முழுமையான அனுபவத்தை மட்டுப்படுத்தியது.

# ''பலிபீடம்''—வரலாற்றை நோக்கிய ஒரு தேடல்

▱ வ. கீதா

'பலிபீடம்' நாடகத்தைப் பெறுத்தவரை என்னை மிகவும் கவர்ந்த விஷயம் அது வெளிப்படுத்தும் வரலாற்றுணர்வுதான். இயல்பாகவும் ஒருவித உரிமையுடனும் கன்னட வரலாற்றின் ஒரு முக்கிய காலகட்டத்தை தன்வயமாக்கிக் கொண்டுள்ளார் கிரிஷ் கர்நாட். இது கர்நாட் என்ற தனிநபரின் அறிவாற்றல், சமூகவுணர்வு, கன்னட இனவுணர்வு ஆகியவற்றைச் சார்ந்த, அவற்றுடன் தொடர்புடைய விஷயம் மட்டுமல்ல. கன்னட வரலாற்று, சமூகச் சூழலுடன் பொருத்திப் பார்க்கவேண்டிய ஒரு விஷயமும்கூட. 'பலிபீடம்' நாடகத்துக்கு தான் எழுதியுள்ள பின்னுரையில் இதை எஸ். வி. ராஜதுரை சுட்டிக்காட்டியுள்ளார். பசுவேசர் வாழ்க்கை, அவர் வாழ்ந்த பன்னிரண்டாம் நூற்றாண்டு ஆகியவற்றைப் பல கன்னட படைப்பாளிகள் தங்களது சிறுகதை, நாவல், நாடகம் முதலியவற்றின் கருப்பொருளாகக் கொண்டுள்ளனர். இப்படைப்பாளிகள் 'கன்னட வரலாறு' என்பதை உயிரோட்டமுள்ள ஒரு இயக்கமாக, தமது சமகாலத்தின் தன்மையை, சமகாலத்துப் பிரச்சினைகள், முரண்பாடுகள் ஆகியவற்றைப் புரிந்துகொள்ள உதவும் ஒரு இயக்கமாக உணர்கின்றனர். அறிகின்றனர். அதாவது, வரலாறு என்பதை ஒரு காட்சிப் பொருளாக, ராஜா ராணி கதையாக, 'மாறாத்தன்மையுடைய' கன்னட உணர்வை வளர்த்துப் பாதுகாத்து வந்துள்ள ஒன்றாக அவர்கள் காண்பதில்லை. "எங்கள் மூதாதையர்களின் வாழ்வுக்கும் செயலுக்கும் உரிமை கொண்டாடத் துணிந்தவர்கள் நாங்கள். எங்கள் வரலாற்றினைப் போற்றவும், தூற்றவும், விமர்சிக்கவும், நடுநிலைமையுடன் மதிப்பிடவும் எங்களால் முடியும்..." இவ்வாறு தங்களது வரலாற்றின் படிப்பினைகளை உணர்வுபூர்வமாகவும், அறிவுபூர்வமாகவும் கன்னடப் படைப்பாளிகளும் அறிவாளிகளும் உணர்ந்து, உள்வாங்கிக்கொண்டுள்ளனர். இதனால் சமூக உணர்வுடனும் இனவுணர்வுடனும் வரலாற்றை அவர்களால் அணுகமுடிகிறது; மாற்றியமைக்க முயற்சி செய்யவும் முடிகிறது.

தமிழகத்தைப் பொறுத்தவரையில் இத்தகைய ஒரு வரலாற்றுணர்வு தமிழ்ச் சமுதாய வாழ்விலும் பண்பாட்டுச் சூழலிலும் வேரூன்றவில்லை என்றே கூற வேண்டும். இராசராச சோழனைப் பற்றிய வித்தியாசமான பார்வையை வெளிப்படுத்திய கவிஞர் இன்குலாப் அவர்களின் கவிதைக்கு நேர்ந்த கதியை நாம் அனைவரும் அறிவோம். அதுபோல, தமிழ், சமஸ்கிருதம், திராவிடம், ஆரியம் போன்ற விஷயங்களைப் பற்றி வரலாற்றுணர்வோடு சிந்திப்பதும் பேசுவதும் எவ்வளவு கடினமான செயல் என்பதையும் நாம் அறிவோம். 'தமிழ் வரலாறு' என்றவுடனேயே பயங்கலந்த பக்தியுடன் அதை அணுகுவதுதான் முறையானது, நமது நீண்டகால வரலாற்றைக் கொண்டாடி அதன் புகழ்பாடுவது தான் சரியானது என்ற நிலைபாட்டில் ஒருசாரார். மற்றோர் சாராரோ, 'தமிழ்

வரலாறு' என்றெல்லாம் நாம் பேசமுடியாது; ஆரிய-இந்து வரலாற்றின் பின்னணியில்தான் தமிழ் மக்களின் கடந்தகால வாழ்வையும் சிந்தனையையும் நாம் மதிப்பிட வேண்டும்; ஏனெனில் தமிழருக்கென தனிச்சிறப்பான வாழ்வு முறைகளோ சமுதாய அமைப்புகளோ, பண்பாட்டுச் செல்வங்களோ கிடையா என்று பறைசாற்றுகின்றனர். வேறு சிலரோ, "வரலாறு, வரலாற்றுச் சூழல் என்பன போன்றவற்றில் எங்களுக்கு அக்கறையில்லை. எக்காலத்துக்கும் பொருந்தும் உண்மைகள், சாகாத் தன்மையுடைய மானுட ஆன்மா, பிரக்ஞை-இவற்றின் ஒரு அம்சம்தான் தமிழர் வாழ்வு..." என்ற சிந்தனையில் மயங்கிக் கிடக்கின்றனர். நாம் வாழ்ந்து செயல்படும் அன்றாடச் சமூகச் சூழலுடன் நமது கடந்தகாலத்தை நாம் பொறுத்திப் பார்க்கத் தவறுவதாலேயே மேற்கூறிய நிலைபாடுகளிலிருந்து மீளமுடியாமல் தவிக்கிறோம். இறுகிப் போய்விட்ட இச்சிந்தனைகளையும் நிலைப்பாடுகளையும் கடந்து முற்றிலும் புதிய, ஆக்க பூர்வமான சிந்தனையை உருவாக்கிக்கொள்ளத் தயங்குகிறோம், மறுக்கிறோம்.

தமிழர்கள் தங்கள் வரலாற்றினை உணர்ந்தறிந்த வரலாற்றுக் காலகட்டங்கள் இல்லாமல் இல்லை. சென்ற நூற்றாண்டின் இறுதியிலும் இந்த நூற்றாண்டின் தொடக்கத்திலும் தமிழ் வரலாறு, தமிழர் வாழ்வு, திராவிடர் பண்பாடு, வாழ்வு முறைகள் ஆகியன தொடர்பாக ஏராளமான ஆராய்ச்சிகள் மேற்கொள்ளப் பட்டன; நூல்கள் எழுதப்பட்டன; கருத்து மோதல்கள் தோன்றக் காரணமாக இருந்த கட்டுரைகள் அன்றைய பத்திரிகைகளிலும் சஞ்சிகைகளிலும் வெளியிடப் பட்டன. தமிழ்ச் சமுதாயத்தில் இத்தகைய வளமான அறிவுச் சூழல் உருவாகக் காரணம், தமிழ் மக்களில் ஒரு சிலர் தங்களது இன, பண்பாடு, வரலாற்று அடையாளத்தை அன்றிருந்த சமூகச் சூழலில் நிலைநாட்ட விரும்பியதுதான். அத்தமிழர்கள் தங்களது அடையாளத்தை தூக்கிப் பிடிக்க விரும்பக் காரணம் அவ்வடையாளத்தை அச்சுறுத்தும் வகையில் அன்று தலையெடுத் திருந்த 'ஆரிய' உணர்வும், அந்த உணர்வின் அடிப்படையில், நாகரிக வளர்ச்சியின் உச்சியில் தாங்கள் இருப்பதாக பார்ப்பனர்கள் கூறிவந்த தும்தான். 'ஆரிய' பெருமைகளை பார்ப்பனர்கள் தமதாக்கிக்கொண்டு 'திராவிட'ரையும் பிறரையும் நாகரிக, பண்பாட்டு வளர்ச்சியில் பின்தங்கியிருப் பவராக கருதிய அக்காலகட்டத்தில் பல தமிழ் அறிஞர்களும் வரலாற்றாசிரியர் களும் தமிழர் வரலாற்றையும் மரபுகளையும் மறுவரையறை செய்யத் துணிந் தனர். 'ஆரிய' சிந்தனைக் கட்டுக்கோப்பை மறுதலித்து 'திராவிட' சிந்தனைக் கட்டுக்கோப்பை வரையறுத்தனர். திராவிட—ஆரிய பிரச்சனை தமிழ் வரலாற் றின் பல்வேறு காலகட்டங்களில் பல்வேறு விதங்களில் வெளிப்பாடு கண்டுள்ள போதிலும் பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதியிலும் இந்நூற்றாண்டின் தொடக்கத்திலும்தான் தமிழ் மக்களின் இனவுணர்வு, மொழிப்பற்று, தன்மான உணர்வு முதலியவற்றுடன் தொடர்புடைய பிரச்சனையாக வெளிப்பாடு கண்டது. மேலும், இக்காலகட்டத்தில்தான் தமிழ்ச் சமுதாய வாழ்வில் பரந்து

பட்ட சமூகவுணர்வு உருவாகத் தொடங்கியிருந்தது. சாதி அமைப்பு, இந்துமதம் ஆகியன பற்றி கிறித்தவ குருமார்களும் மதபோதகர்களும் முன்வைத்த விமர்சனங்கள், சாதி அமைப்பின் உள்ளார்ந்த முரண்பாடுகளை நவீன அரசியல் சிந்தனைகளின் துணையுடன் சாடத்துணிந்தவர்களின் செயல்பாடுகள் (உதாரணத்துக்கு, டி.எம். நாயர் போன்றோரின் செயல்பாடுகள்) ஆகியன சாதியமைப்பிற்கும் பார்ப்பன ஆதிக்கத்திற்கும் ஆரியப் பண்பாட்டு—சமுதாய மரபுகளுக்கும் இடையே நிலவி வந்துள்ள வரலாற்று ரீதியான தொடர்புகளை தெளிவுபடுத்த உதவின. பார்ப்பனரல்லாதோர் இயக்கம் வளரக் காரணமாயிருந்த இந்த புதிய சமூகப் பிரக்ஞையுடன் தமிழ் அறிவாளிகளின் வரலாற்றுணர்வும் இணைந்து, சமகாலத்துக்கும் வரலாற்றுக்கும் நினைவுப் பாலங்களை அமைக்க உதவின,

ஆனால் இச்சமூகப் பிரக்ஞையும் வரலாற்றுணர்வும் தமிழர்களின் வாழ்வு, சமுதாயம், சிந்தனை முக்கியவற்றை ஆக்கப் பூர்வமான வகையில் சீரமைக்கவும் மாற்றியமைக்கவும் உதவவில்லை, ஏனெனில் அவையுமே இறுகிப் போயின. அவற்றின் துணைகொண்டு தங்களது செயல்களுக்கு நியாயம் கற்பிக்க முற்பட்ட அரசியல்வாதிகளும் அறிவாளிகளும் சமூகப் பிரக்ஞையை தமிழ் மக்களின் வாழ்விலும் சிந்தனையிலும் வேரூன்றச் செய்வதற்குப் பதில் வறட்டு கோஷங்களுக்கு குறுக்கினர்; உயிருள்ள, இயக்கமுள்ள ஒன்றாக வரலாற்றினை மறுவரையறை செய்து மக்களின் வாழ்வுடன் அதை இணைத்துக் காட்டுவதற்குப் பதில், அதை வெறும் அலங்காரக் காட்சிப் பொருளாக உருவாக்கிக் காட்டினர். வரலாறு நீங்கிய பண்பாட்டுத் தளமும் சமூகச் சூழலும் படைப்பிலக்கியங்களின் தன்மையையும் தரத்தையும் பெரியளவுக்குப் பாதிக்கக் கூடியவை. நாடகக் கலையைப் பொறுத்தவரை, அது பிற கலைகளைவிட சமுதாய உணர்வை மேலதிகமான வகையில் உள்ளடக்கிய ஒன்று. நாடகாசிரியரும் பார்வையாளர்களும் பகிர்ந்து கொள்ளக்கூடிய பொதுவான வரலாறு, மொழி, மரபுகள் ஆகியவற்றை சார்ந்தே நாடகக்கலை இயங்குகிறது. நாடகாசிரியர் வரலாற்றை சமகால தேவைகளின் அடிப்படையில் புரிந்துணர்ந்து மறுபடைப்பு செய்யும்போதும், மரபுகளின் துணைகொண்டு சமகால வாழ்வின் முரண்பாடுகளை வெளிப்படுத்தும் போதுமே குறிப்பிட்ட நாடகம் உயிர்பெறுகிறது. இவ்வாறு ஒரு நாடகாசிரியர் செய்வதாலேயே நடிகர்களுக்கும் பார்வையாளர்களுக்கும் இடையே ஒரு 'உரையாடல்' சாத்தியப்படுகிறது. இத்தகைய ஒரு உரையாடலை ஒரு நாடகாசிரியர் தோற்றுவிக்க தவறும்போதும் அவரால் இத்தகைய உரையாடலை சாத்தியப்படுத்த இயலாத போதும் நாடகம் வெறும் சடங்காக மாறிவிடுகிறது.

தமிழகத்தில் நிகழ்த்தப்படும் நாடகங்களில் பெரும்பாலானவை 'சடங்குகள்' தாம், தமிழ் மக்களின் வாழ்வோடும் அக்கறைகளோடும் எந்தவித தொடர்பு

இல்லாத நாடகங்களே இங்கு பெருமளவு காணப்படுகின்றன. இவற்றில் சில பொழுதுபோக்கு' நாடகங்கள். பார்வையாளர்களைச் சிரிக்க வைத்து, அவர்கள் சிந்திப்பதை தடுப்பதே இவற்றின் நோக்கம். வேறு சில நாடகங்கள் சமீபத்தில் சென்னை தொலைக்காட்சியில் நிகழ்த்தப்பட்ட 'கருஞ்சுழி'போன்ற நாடகங்கள்—குறிப்பிட்ட அடையாளங்கள் நீங்கிய அருவமான மானுடரை பற்றியதாக அமைந்து, தமிழ்ச் சமூக தளத்திலிருந்து அந்நியப்பட்டுக் காணப் படுகின்றன. இவை தம்மை 'நவீன' நாடகங்களாக வேறு காட்டிக் கொள் கின்றன. ஆங்காங்கே வித்தியாசமான சில முயற்சிகள் நடைபெற்று வருகின்ற போதிலும் நவீன தமிழ் நாடகம் என்பது பல சமயங்களில் சம்பிரதாயமான கலையாக, சமூக உள்ளடக்கம் ஏதும் இல்லாத கலையாகவே தன்னை முன் நிறுத்திக் கொள்வதில் பெருமைப்பட்டுக் கொள்கிறது.

தமிழ் நாடகச் சூழலை வளப்படுத்தவும் ஆழப்படுத்தவும் கிரிஷ் கர்நாட் போன்றோரின் நாடகங்கள் உதவும் என்பதில் சந்தேகமில்லை. 'பலிபீடம்' நாடகத்தைப் பொறுத்தவரையில். அது நமக்கு இயற்றியளிக்கக் கூடிய படிப் பினைகள் ஏராளம். வரலாற்றுச் செய்திகளைப் புரிந்துகொண்டு அவற்றை நாடகமாக்குவது எப்படி? பலநூறு ஆண்டுகளுக்கு முன்னர் வாழ்ந்தவர்களின் வாழ்வு, சிந்தனை, செயல்பாடு ஆகியவற்றை நம் காலத்தவருக்குப் பொருத் தப்பாடு உடைனவாக ஆக்கிக் காட்டுவது எவ்வாறு? சமகால அக்கறைகள், தேவைகள் முதலியவற்றின் அடிப்படையில் வரலாற்றை புரிந்துகொள்ள விழையும்போது, குறிப்பிட்ட வரலாற்றுக் காலகட்டத்தின் வரம்புகளை உணர்ந்து, கடந்தகாலம், சமகாலம் ஆகிய இரண்டு வெவ்வேறு காலகட்டங் களின் சாரத்தையும் சிதைக்காமல் வெளிப்படுத்துவது எப்படி? இம்மாதிரியான கேள்விகளை எழுப்பி அவற்றுக்கான பதில்களை தனது நாடகத்தின் வடிவம், நாடக நிகழ்ச்சிகள், வசனம் ஆகியவற்றினூடாக நமக்கு அளிக்கிறார் கர்நாட்.

நாடக நாயகன் பசவண்ணன் வரலாற்று நாயகனும் கூட. சீர்திருத்தவாதி, கவிஞன், அருள்தொண்டன், சரணர் இயக்கத்தை நிறுவியவன், சாதிவேறு பாடுகளை கடந்த இலட்சிய சமுதாயத்தை உருவாக்க நினைத்தவன், அன்பே சிவம், கொல்லாமையே நன்னெறி என்று வாழ்ந்த மகான்—கன்னடவரலாற்று மரபும் பக்தி இலக்கிய மரபும் பசவண்ணனைப் (பசுவேசரைப்) பற்றி முன் வைக்கும் செய்திகள் இவை. இவ்வரலாற்றுச் செய்திகளை தனது நாடகத்தின் தொடக்கமுனையாகக் கொள்ளும் கர்நாட், தனது கதாநாயகனை பற்றிய வேறொரு தனிச் சிறப்பான கண்ணோட்டத்தையும் நாடக நிகழ்ச்சிகள், வசனம் ஆகியவற்றின் அடிப்படையில் உருவாக்குகிறார். தனது இலட்சிய நாயகனைப் பற்றிய விமர்சனம் ஒன்றை நாடகத்தின் உள்ளிருந்தே எழுப்பப் படும் விமர்சனமாக முன்வைக்கிறார். பசவண்ணன் மாயாஜாலங்கள் செய்து

காட்டவல்ல குட்டிக் கடவுளா? அவனைச் சுற்றி தென்படக்கூடிய ஒளிவட்டத்தின் ஈர்ப்புச் சக்திதான் சரணர்களை ஒன்றுதிரட்டவும், ஒன்றுபடுத்தவும் உதவியதா? பசவண்ணன் என்ற இலட்சிய மானுடனைப் பற்றி எழுப்பப்படும் இச்சந்தேகங்கள் பிஜ்ஜள மன்னன் என்ற மற்றொரு முக்கிய கதாபாத்திரம் எழுப்புபவையே. இச்சந்தேகங்களை நாடக மேடையில், ஒரு முக்கியக் கதா பாத்திரத்தின் மூலமாக எழுப்புவதன் மூலம் வரலாற்றுடன் ஒரு உரையாடலைத் தொடங்குகிறார் கர்நாட். அந்த உரையாடல் நாடகம் முழுவதிலும் தொடர்ந்து நடைபெறுகிறது. குறிப்பிட்ட வரலாற்று நிகழ்வுக்கும் அந் நிகழ்வை நினைவு கூர்ந்து அதற்குப் பொருள் கற்பிக்க முயற்சி செய்யும் சமகால பிரக்ஞைக்கும் இடையே உள்ள இடைவெளியைச் சுலபமாக கடந்து விட முடியாது என்பதையே கர்நாட் இங்கு வலியுறுத்தினார். இந்த இடைவெளி இருப்பதை உணர்ந்து செயல்படுவதன் மூலமும் இரு வெவ்வேறு கால கட்டங்களை ஒன்றோடு ஒன்று பொருத்திப் பார்த்து ஒற்றுமை வேற்றுமைகளைப் பதிவு செய்வதன் மூலமும்தான் நமது காலத்தின் முரண்பாடுகளைத் தெளிவுபடுத்திக் கொள்ளமுடியும் என்பதையும் அவர் சுட்டிக் காட்டுகிறார்.

இருவெவ்வேறு காலகட்டங்கள் ஒன்று சேர்வதையும் முரண்படுவதையும் பசவண்ணன், பிஜ்ஜளன் ஆகிய இரண்டு கதாபாத்திரங்களின் சித்திரிப்புகளில் நாம் காணலாம். கிரிஷ் கர்நாட் பசவண்ணனைச் சித்திரித்துள்ள விதம் காந்தியையும் அம்பேத்காரையும் நினைவூட்டுவதாக அமைந்துள்ளது. ஆனால் பசவண்ணன் காந்தியும் அல்ல, அம்பேத்காரும் அல்ல. 'அவனது கொல்லாமை கொள்கை காந்தியின் அகிம்சை தத்துவத்தை ஒத்ததுதான். அரசியல் மெய் நிலைகளை உணர்ந்து செயல்படுவதிலும் பிஜ்ஜளன் தனக்குக் காட்டும் ஆதரவை அவனது மகன் காட்ட வேண்டியதில்லை என்பதை பசவண்ணன் நன்றாகவே புரிந்து கொள்கிறான்—அவன் காந்தியை ஒத்தவனாக இருக்கிறான். ஆனால் காந்தியைப்போல் பிடிவாதக்காரனல்ல பசவண்ணன். 'தான்' என்ற பெருமை அவனுக்கு இல்லை. தன்னை எதிர்ப்பவரை, மாற்று கருத்து கொண்டிருப்பவரை தன்வழிக்குக் கொண்டுவர அவன் 'சத்தியாகிரகம்' மேற் கொள்வதில்லை. கலப்புத் திருமணம் பற்றிய தனது கருத்தை சரணர்கள் ஏற்காதபோது சரணர்களின் அரசியல் விருப்பத்துக்கு அவன் இணங்கி விடுகிறான். அதே வேளையில் தான் செய்யவேண்டியதை—பிஜ்ஜள மன்னனுக்கு ஆதரவாக அவனது அரண்மனை நோக்கிச் செல்வதை—கடமையென செய்து முடிக்கிறான். கலப்புத் திருமணத்தை ஆதரிப்பதில் அவன் காட்டும் தயக்கம், அம்பேத்காருக்கு வகுப்புரிமைப் பிரச்சனை தொடர்பாக ஏற்பட்ட நிர்ப்பந்தத்தை நினைவூட்டுகிறது. காந்தியை எதிர்த்தால் சாதி இந்துக்களின் ஆத்திரத்துக்கும் கொலை வெறிக்கும் தலித் மக்களை தான் பலியிட நேரும் என்று அம்பேத்கார் நினைத்ததுபோல. சனாதனப் பார்ப்பனர்களின் கோபத்தையும் அதன் விளைவுகளையும் பற்றி முன்கூட்டியே சிந்தித்துப், பார்

பசவண்ணன், கலப்புத் திருமணத்தை நடத்தத்தான் வேண்டுமா என்று தயங்குகிறான். காந்தியின் 'அரிசன' கொள்கையின் சாயல்கூட பசவண்ணனிடம் இல்லைதான் என்றாலும், அவனது நிதானமான சிந்தனையும் அரசியல் பார்வையும் காந்தியை நினைவூட்டுகின்றன. அம்பேத்காரைப் போல் மாபெரும் மக்கள் இயக்கத்தின் தலைவனாக அவன் இருந்தபோதிலும் சரணர்களின் பலத்தை மேலதிகமானதாக அவன் கருதுவதில்லை. காந்தியின் பிடிவாதம் அம்பேத்காரை அடக்கியது. பசவண்ணனோ தனது உள்ளுணர்வுக்கு செவி மடுக்கிறான். பிஜ்ஜள மன்னனால் தன்னை இனியும் ஆதரிக்கமுடியாது என அறிந்து ஊரைவிட்டுப் புறப்பட ஆயத்தமாகிறான்.

இருபதாம் நூற்றாண்டின் இரு மாபெரும் தலைவர்களை நினைவூட்டும் வகையில்அமைந்திருக்கும் கர்நாடின் சித்தரிப்பு பன்னிரண்டாம் நூற்றாண்டில் வாழ்ந்த ஒருவனை இரத்தமும் சதையுமான மானுடனாக, நமக்கு நெருக்கமான ஒருவனாகக் காட்டுகிறது. அதேசமயம் இந்த வரலாற்று பிம்பத்தை விமர்சிக்கவும் நம்மை தூண்டுகிறது. பசவண்ணன் யார்? அந்தக் காலத்து காந்தியா? அம்பேத்காரின் முன்னோடியா? பன்னிரண்டாம் நூற்றாண்டுச் சூழல் நமது சூழலை ஒத்ததா? அன்று இருந்த அதிகார அமைப்புகளும் ஆதிக்க உறவுகளும் இன்றும் உள்ளனவா? நமக்குப் பரிச்சயமான சமகால நிகழ்வுகளின் அடிப்படையிலும், நாமறிந்த பெருந்தலைவர்களினூடாகவும் பன்னிரண்டாம் நூற்றாண்டையும் பசவண்ணனையும் நாம் விமர்சிக்க முற்படுகிறோம். வரலாற்றுடன் நாடகாசிரியர் நடத்தும் உரையாடலில் நாமும் பங்கு பெறுகிறோம்.

கிரிஷ் கர்நாடின் வரலாற்றுணர்வு பிஜ்ஜள மன்னன் பற்றிய சித்தரிப்பிலும் தன்னைக் காட்டிக்கொள்கிறது. பிறப்பால் நாவிதனாக இருந்து பின்னர் சத்திரியனான பிஜ்ஜள மன்னன் சரணர் இயக்கத்தையும் அதன் சாதி எதிர்ப்புக் கொள்கையையும் ஆதரிப்பவன். சரணர் தத்துவத்தை அவன் ஏற்றுக் கொண்டதால்தான் அவன் இந்த இயக்கத்தை ஆதரித்தான் என்பதைக் கர்நாட் திட்டவட்டமாகக் கூறுவதில்லை. அவ்வியக்கத்தை பிஜ்ஜளன் ஆதரிக்கக் காரணம் பசவண்ணனுடன் அவனுக்கிருந்த நட்புறவாக இருக்கலாம். அல்லது கல்யாண தேசத்தின் பொருளாதார வாழ்வில் சரணர்கள் ஆக்கப் பூர்வமான பங்கு வகித்ததால் அவர்களை அவன் ஆதரித்திருக்கலாம். நல்லெண்ணமும் சுயநலமும், சமூக ஈடுபாடும் ஆதிக்கவுணர்வும் பிரிக்கமுடியாதபடி பிணைந்திருக்கும் ஒரு மனோநிலையை பிஜ்ஜளன் வெளிப்படுத்துகிறான். இந்த வகையில் அவன் சமகால அரசியல் தலைவர்கள் சிலரை ஒத்தவனாகக் காட்சி அளிக்கிறான். இங்கு வேறொரு விஷயத்தையும் கர்நாட் சுட்டிக்காட்டுகிறார். வர்ணாசிரம தருமத்தையும் பார்ப்பனியத்தையும் எதிர்க்க வருவோர் அரசாட்சியைக் கைப்பற்றி அரசைப் புரட்சிகர மாற்றங்களுக்கு உட்படுத்தினாலொழிய,

இருக்கக்கூடிய அரசின் விருப்பு வெறுப்புகளுக்கு இணங்கிச் செயல்பட வேண்டியதுதான் என்பதுதான் அது. உதாரணத்துக்கு பிஜ்ஜளன் சரணர்களை ஆதரித்தாலும் அவனது மகனோ அவனது அரசவையில் இருக்கும் பார்ப்பன முக்கியஸ்தர்களோ அந்த இயக்கத்தை ஆதரிக்காததோடு எதிர்க்கவும் செய்கின்றனர். பசவண்ணன் இதை நன்கு அறிந்திருந்ததாலேயே வருணாசிரம தருமத்தை நேரடியாக எதிர்க்கத் தயங்குகிறான். பிஜ்ஜளன் என்ற தனிமனிதன், தான் வகிக்கும் அரசு பதவியினைக்கொண்டு சரணர்களுக்குத் தனது நாட்டில் பாதுகாப்பு அளித்திருக்கலாம். ஆனால் அவனது அரசாங்கமோ அரண்மனைப் பார்ப்பனர்களோ இந்த ஆதரவைக் காட்ட மாட்டார்கள் என்பதை தெளிவாகப் புரிந்து கொண்டிருந்த பசவண்ணன், சாதிய அமைப்பைத் தகர்த்து தரைமட்டமாக்க வேண்டுமானால் சரணர்கள் செய்ய வேண்டிய பணிகள் பல உண்டு என்று கூறுகிறான். இந்தப் பணிகள் என்னவென்று அவன் கூறுவதில்லை. ஆனால் நமது சமகாலத்துப் பார்ப்பனரல்லாத இயக்கங்களும் தலித் இயக்கங்களும் அரசுடன் கொண்டுள்ள முரண்பட்ட உறவை மனத்தில் கொண்டுதான் கர்நாட் பசவண்ணனை விவேகியாகச் சித்தரித்துள்ளார் என்று நமக்குத் தோன்றுகிறது. சமகாலப் பார்ப்பனரல்லாத இயக்கங்களும், தலித் இயக்கங்களும் அரசாங்கங்களை அண்டிச் செயல்பட்டபோதும் சரி, அரசின் தன்மையை மாற்றியமைக்காது அரசாட்சியைக் கைப்பற்றி பழைய அரசமைப்பைக் கொண்டு மட்டுமே செயல்பட்ட போதிலும் சரி, தமது புரட்சிகரக் குறிக்கோள்களை முழுமையாக நிறைவேற்ற முடியாமல் போய்விட்டது என்பது கண்கூடு. மேலும் அரசை அண்டிச் செயல்பட்ட இயக்கங்கள் அரசால் உள்ளிழுத்துக் கொள்ளப்பட்டுள்ளன. சாதிய சமூதாயத்தில் அரசமைப்புகளின் இருப்பை நியாயப்படுத்தி நீதிநெறி போதனைகளை வழங்கி வந்துள்ளது பார்ப்பனியம். அரசுக்கும் பார்ப்பனியத்துக்கும் உள்ள தொடர்பை துண்டித்தெறிந்தாலொழிய புரட்சிகர மாற்றங்களை ஏற்படுத்தமுடியாது என்பதை பிஜ்ஜள மன்னனுக்கு நேர்ந்த அவலத்தின் மூலம் சுட்டிக் காட்டுகிறார் கர்நாட்.

பசவண்ணன் பிஜ்ஜளன் ஆகியோரை சித்திரித்த விதத்தில் மட்டுமின்றி பார்ப்பனியம், சாதியமைப்பு, அரசதிகாரம் ஆகியவற்றைப் பற்றி கர்நாட் கொண்டிருந்த புரிதல்களினூடாகவும் அவரது வரலாற்றுணர்வு வெளிப்படுகிறது. பன்னிரண்டாம் நூற்றாண்டை மறுபடைப்பு செய்யும் கர்நாடின் அக்கறை வரலாற்றின் இயக்கத்தில் தொடர்ந்து இருந்து வந்துள்ள ஒரு தேடலின் வெளிப்பாடுகள்தாம். தனது அக்கறைகளை நாடகமேடையில் அரங்கேற்றியதன் மூலம் பார்வையாளர்களுடன் ஒரு உரையாடலைத் தொடங்கியுள்ளார் [illegible] கர்நாட் போன்றவர்களின் முயற்சிகள் தமிழ் நாடகச் சூழலில் சலனத்தை ஏற்படுத்தி ஆக்கபூர்வமான மாற்றங்களுக்கு வழிவகுக்கக் கூடியவை. ஆனால் கர்நாட் போன்றவர்களோடு உரையாடும் பொறுப்பு நம்முடையதாகத்தான் இருக்க முடியும். முயற்சி இங்கிருந்துதான் தொடங்கவேண்டும்.

## சைபீரிய நாரைகள் இனி இங்கு வரப்போவதில்லை

□ ந. முத்துசாமி

லச்சுவடு சிறப்பிதழ் 1991 வெளிவந்தபோது அதன் பக்கங்களைப் புரட்டி டன் 'சைபீரிய நாரைகள் இனி இங்கு வரப்போவதில்லை' என்ற எம். டி. த்துக்குமாரசாமியின் நாடகத்தைத்தான் படித்தேன். அப்போதே அவருக்கு த வேண்டுமென்று தோன்றிற்று. அப்படியானால் இன்னும் கொஞ்சம் னத்துடன் படிக்கவேண்டும். அது முடியவில்லை. உடம்பிலும் மனதிலும் ாஞ்சம் சோம்பல் தடம் தெரியாமல் ஓடுகிறது. இயல்பாக அது ஓடிக்கொண் ருக்கிறது. இப்போதுபோல ஏதோ ஒரு அவசியம் நேரும்போது அதை மீறிக் ரியம் செய்து விடுகிறோம். அந்த நாடகத்தின்மேல் விழுந்திருந்த என் னம்தான் அன்று 'வெளி' பத்திரிகை வெளியிட்ட கிரிஷ்கர்னாடின் பீடம்' என்ற நாடகப் புத்தகத்தின் விழாவில் பேசிய எஸ். வி. ராஜதுரை லச்சுவடில் வந்திருக்கும் இரண்டு நாடகங்களையும்) அதைச் சிறப்பித்து ல்லாததைக் கேட்டு வருத்தத்தை கொடுத்ததுபோலும். அந்தக் கூட்டத்தில் னும் பேசினேன். எஸ். வி. ராஜதுரை கிரிஷ் கர்னாடைப் போன்ற சமூகப் க்ளை உள்ள நாடகாசிரியர் ஒருவர் இங்கு தோன்றவில்லை என்று சொன் ர்.வேறு சொற்களில் அவர் சொல்லியிருந்தாலும் இந்த அர்த்தமும் அதில் ந்தது என்று நினைக்கிறேன்.

ங்கள் கொஞ்சம் தடித்த வார்த்தைகளைப் பரிமாறிக் கொண்டோம். அநாரிக ன வார்த்தைகள் அல்ல அவை என்று சொல்லலாமா என்று எனக்குத் தெரிய லை. தத்துவார்த்த ரீதியாக அலசிப் பார்த்தால் அவை அநாகரீகமானவை று எஸ்.வி.ஆர். சொல்லக்கூடும். 'நமக்கு ஆத்திர மூட்டுபவர்களைப் பற்றி டுமல்ல. நமக்கு வேண்டியவர்களைப் பற்றிப் பேசும்போதும்...சில சமயங் ல் நமது வார்த்தைகள் தடித்துவிடுகின்றன. பல்வேறு மனநிலைகளின் த்தத்தின் கீழ் உணர்ச்சி அறிவை மறைத்துவிடுவது சாதாரணமாகவே ழ்கிறது'—என்றும் 'சில சமயங்களில் பல்வேறு காரணங்களுக்காக உள் ான்று வைத்துப் புறமொன்று பேசுகிறோம்'-என்றும் எஸ்.வி.ஆர். மே மாத ங்களாவில் வாசகர் கடிதத்தில் எழுதுகிறார். இவ்வளவு தெளிவான வையுள்ள மனிதரின் பார்வைக்குக்கூட சில அம்சங்கள் பிடிபடாமல் போய் ம் போலும். இவருடைய 'இனி' பத்திரிகை மூலம் எழுத்தாளராக எனக்கு முகமானவர் எம். டி. முத்துக்குமாரசாமி. இவருடைய கண்டுபிடிப்பு அவர் று சொல்லலாமோ என்னவோ? அன்று ஆறுமுகத்தின் 'கருஞ்சுழி' நாடகத் த் தாக்கியே பேசினார். மேலும் அது சென்னைத் தொலைக்காட்சியில் ரப்பப்பட்டது பற்றியும் சொன்னார். இவர் டி. வி. நிலையத்துக்குப் னாராம். அங்கு அவர்கள் 'கருஞ்சுழி'யை ஒளிபரப்பியது பற்றி சுவாரஸ்ய ச் சொல்லவில்லையாம்.ஏதோ உலக நாடக தினத்துக்காக கடன் எழவுக்கு துபோல் சொன்னார்கள் என்று சொன்னதாக அர்த்தம் தொனித்தது

எனக்கு. இவை துல்லியமான வார்த்தைகள் இல்லை. என்னுடைய கோபத்தின் கலப்புகூட இதில் இருக்கிறது.

ஆறுமுகத்தின் நாடகம் பற்றி ஆகிய இந்திய அளவில் உள்ள மதிப்பு எனக்குத் தெரியும். மைசூரில் நடைபெற்ற தென்மண்டல நாடக விழாவில் அதைப்பற்றி குறிப்பாக சிலாகித்துப் பேசினார்கள். மேலும் டில்லியில் நடைபெற்ற இந்த ஆண்டு நாடக விழாவுக்கான நாடகங்களைத் தேர்ந்தெடுக்கும் நிபுணர்கள் குழுவில் அதை ஏகோபித்து சிலாகித்துப் பேசினார்கள். இவை எல்லாம் அது நாடகமாக எழுதப்பட்டிருப்பதைவிட அது நாடகமாக மேடையில் அளிக்கப் பட்டதை சிறப்பித்து சொல்லும் பாராட்டுகள். இதற்குப் பிறகு டில்லியிலிருந்தும் கல்கத்தாவிலிருந்தும் நாடகங்களை இயக்குவதற்கு அவருக்கு அழைப்புகள் வந்திருக்கின்றன. அதிக அக்கறை எடுத்துக்கொள்ளாமல் டி.வி.க்காரர்கள் கருஞ்சுழியைப் படம்பிடித்து வெளியிட்டார்கள். இதற்கு ஆறுமுகம் ஒத்துக் கொள்ளாமல் இருந்திருந்தால் நன்றாக இருந்திருக்கும். ஆனால் 50 சதவீதப் பார்வையாளர்கள் அதைப் பாராட்டி இருப்பதை அறிந்து கொண்டிருக்க முடியாது. தொலைக்காட்சி நிலையத்துக்கு பார்வையாளர்கள் எழுதியிருந்த கடிதங்களை பார்க்க நேர்ந்தது. அதில் பாதிப்பேர் கண்டித்தும், பாதிபேர் டி.வி. நிலையத்தின் இந்த முயற்சியைப் பாராட்டியும் எழுதியிருந்தார்கள். கண்டிப்பவர்கள் பக்கம் எஸ்.வி. ராஜதுரையும், டி.வி. நிலையத்தில் அவரிடம் சொன்னவர்களும் இருந்தார்கள் போலும். பாராட்டியவர்கள் எனக்கு ஆறுதலைக்(?) கொடுத்தார்கள். இந்த நாடகத்தைப் பற்றி நல்ல முன்னுரை ஒன்றை வெங்கட் சாமிநாதன் காலச்சுவடுவில் எழுதியிருக்கிறார். என் கவனம் இப்போது சைபீரிய நாரைகள் மேல்தான் இருக்கிறது.

விருட்சம் ஜனவரி—மார்ச் 1992 இதலில் காலச்சுவடு பற்றி எழுதியிருக்கும் தர்மகீர்த்தி என்ன சொல்கிறார் இதைப்பற்றி? நாடகங்கள் எனக்குப் பிடிக்க வில்லை' என்று எழுதுகிறார். இவருக்குப் பிடிக்காமல் போனது என்னைக் குழப்புகிறது. அம்பை நகரில் தனது சகஜீவிகளான எலியையும், குருவியையும் பற்றி எழுதியிருக்கிறார்' என்று அம்பையை நகைச்சுவைக்காக எலிகளோடும், குருவிகளோடும் ஒப்பிடுகிறார். அடுத்த வரியில்' அம்பைக்கே உரிய Touches அங்கங்கே உண்டு' என்றும் எழுகிறார். தான் சொல்ல வந்ததில் அவர் எவ்வளவு தீவிரமாக இருக்கிறார் என்று எனக்குத் தெரியவில்லை. அம்பையின் கதையைப் பற்றி முன்னதாக இந்த விமர்சனத்தைப் படித்துவிட்டேன். இது என் மண்டையில் 'புத்தகசாலைக்காரர் வேஷ்டிக்குள் போட்ட ஒரு கையை எடுக்கவே மாட்டார் என்று தோன்றியது. உள்ளே அப்படி என்ன புதையல் இருந்தது என்று தெரியவில்லை. பெண்களைக் கண்டதும் அவர் கை அப்படிப் போய் மறைந்து கொண்டது' என்ற வரிகளை அறைந்துவிட்டது. தர்மகீர்த்தி 'எலியையும், குருவியையும்பற்றிச் சொல்வதும் அம்பை புதையலைப்பற்றிச் சொல்லி

தும் ஒன்றுதான் என்று எனக்குத் தோன்றுகிறது. இந்தப் புதையல் வரியை ித்துவிட்டு படித்துப் பாருங்கள். சூழ்நிலையின் அர்த்தத்தை இன்னும் சிறப் க உணரமுடியும். மேலும் தர்மகீர்த்தி சுந்தரராமசாமியை ஞானத்தந்தை ன்றும், மலரில் இடம் பெற்றிருக்கும் எழுத்தாளர்களை தங்கள் அளவில் பகுருமார்கள் என்றும், அப்போது அதன் ஆசிரியர் குருமஹராஜ் ஆகிறார் ன்றும் எழுதுகிறார். இது அறுபது வயது நிரம்பியவருக்கு உண்டாகிற ஆசை ாகும். சுந்தர ராமசாமி தனக்குப் பிடிக்காத இலக்கிய வாலிகளை வீழ்த்த திப்புரையாளர்களாகிய சுக்ரீவர்களைப் பயன்படுத்துகிறார் என்றும் எழுது றார். இங்கும் எனக்குத் தோன்றுவது இவ்வளவு தெரிந்தவருக்கு ஏன் இந்த ாடகங்கள் பிடிக்காமல் போகின்றன. புதுக்கவிதை தோன்றிய நாளில் ண்டான புரிந்துகொள்ளல் பிரச்னையைப் போன்றதொரு பிரச்சனையா து? நான் எஸ்.வி.ஆரையும், தர்மகீர்த்தியையும் ஒரே தரத்தில் வைத்துப் ார்க்கவில்லை. இரண்டு பேரும் வெவ்வேறு திசைகளைச் சார்ந்தவர்கள்.

மேலும் சுபமங்களா மார்ச் 1992 இதழில் சுஜாதா எழுதுகிறார்: “நாடகங்கள் ரண்டு உள்ளன. ஒன்று டில்லியில் வெங்கட் சாமிநாதன் கூற்றுப்படி தமிழ் ாடக உலகில் பெரும் பாய்ச்சலை ஏற்படுத்திய ‘கருஞ்சுழி’ என்னும் பெரும் உடல் அசைவுகள் கொண்ட நாடகம். இந்த நாடகத்தின் பலவீனமான அம்சமே பேச்சுதான் (வெங்கட்?). மற்றொரு நாடகம் ‘சைபீரிய நாரைகள் இங்கு வரப்போவதில்லை’ என்னும் தலைப்பிட்ட எம்.டி.முத்துக்குமாரசாமியின் ாடகம். மைம். ஸிம்பாலஜி. நாடகத்தின் ஒரு பாத்திரம் ஒரு பாரா முழுவதும் ‘கிறிச்சு கிறிச்சு கிறிச்சு’ என்றே சொல்லிக் கொண்டிருக்கும் உரையாடல்கள். இவை மட்டும்தான் நாடக இலக்கியம் என்று சொன்னால் நீங்கள் ஒப்புக் கொள்வீர்களா? நாடகத்தின் மற்ற பரிமாணங்களை இவர்கள் பிடிவாதமாக அமோதிக்க மறுப்பதும் ஒரு வகையில் க்ளிஷே ஆகிவிட்டது” என்று.

இதற்கு சுந்தரராமசாமி சுபமங்களா ஏப்ரல் 1992இல் பதில் சொல்லியிருக் கிறார். அதில் ஒன்றை மட்டும் இங்கு எடுத்துக் கொள்வது எனக்கு சௌகரிய மானது. “எம். டி. முத்துக்குமாரசாமியின் நாடகம் சிற்றிதழ் வாசகர்களுக்குக் கூட சற்று சிரமத்தைத் தரலாம். அந்த வகையில் அந்த ஒன்றுதான் மலரில் இடம் பெற்றிருக்கிறது. இந்த நாடகத்தை வாசகர்கள் தீவிரமாக எதிர்கொள்ள வேண்டும் என்று எதிர்பார்த்து அந்த நாடகம் சேர்க்கப்பட்டிருக்கிறது.” பிறகு கருஞ்சுழியைப்பற்றி எழுதும்போது ‘அந்த எழுத்து வடிவத்துடன் ஒரு வாசகன் முன் பரிச்சயம் ஏற்படுத்திக் கொண்டால் காட்சி வடிவம் பார்க்கக் கிடைக்கும் போது மேலும் தெளிவான அனுபவம் மனதில் விரிவுபெறும்’ என்று எழுது கிறார். இது சைபீரிய நாரைகளுக்கும் பொருந்தும். இது இன்னும் மேடை யேற்றப்படாததால் இதன் அனுபவ விரிவைப் பற்றிச் சொல்லவிட்டுவிட்டார் சுந்தரராமசாமி. இதன் அனுபவ விரிவு இதைக் காட்சியாகப் பார்க்கத் தெரிந்த

வருக்கு அற்புதமான ஒன்று தமிழில் நிகழ்ந்திருப்பது தெரியவரும் என்று நினைக்கிறேன்.

மேலே நான் குறிப்பிட்டிருக்கும் பலரோடு என்னையும் சேர்த்துக்கொள்ள வேண்டும் என்றே எண்ணுகிறேன். எனக்கும் எம்.டி.எம்.க்கும் நண்பரா தமிழ் தெரியாத ஒரு தியேட்டர்காரரிடம் நான் இதன் முக்கியத்துவம் பற்றி பேசாமல் விட்டுவிட்டேன். இதுமேலே உள்ளவர்கள் தவறவிட்டதுபோல ஒரு தவறு என்று செல்லலாமா? எஸ்.வி.ஆர். இப்படிப்பட்ட அமைப்பில் உள்ள ஒன்றை ஏற்றுக்கொள்ள மாட்டார். புரியவில்லை என்ற விஷயம் அவ அவருடையது. நிச்சயமாக சுஜாதாவுக்குப் புரியவில்லை என்று தோன்று கிறது. தர்மகீர்த்திக்குப் பிடிக்கவில்லை. நல்லவேளை. சுந்தரராமசாமி இதை பதிப்பித்தார். முதல்வாசிப்பில் இதன் முழுப் பரிமாணத்தையும் நான் புரிந்து கொள்ளவில்லை. இப்போது ரெங்கராஜன் ‘வெளி’ பத்திரிகைக்கு என்னை காலச்சுவடு பற்றி விமர்சனம் எழுதித் தரும்படி கேட்ட பிறகு இதைப் படித்த போது ஆச்சரியமாக இருந்தது. மேலும் எஸ்.வி.ஆரின் விமர்சனம் என்னை இதை மீண்டும் படிக்கத் தூண்டியது. அவருக்கு நன்றி.

இப்போது சுஜாதா இதன் தலைப்பில் உள்ள சொற்களில் உள்ள ‘இனி’ யை விட்டுவிட்டது அச்சுத்தவறு என்று நான் எண்ணவில்லை. இங்கு ‘இனி’க்கு தனி அர்த்தம் இருக்கிறது. இது வருத்தத்தை குறிக்கிறது. இனிமேல் இந்த சைபீரிய நாரைகள் வரப்போவதே இல்லை என்பதை அவர் குறிக்கிறார். அந்த காலம் கடந்து வந்துவிட்டோம். இனி செய்யவேண்டியது என்ன? என்பதாக பல அர்த்தங்களைக் கொடுக்கிறது தலைப்பு.

மிகவும் அற்புதமான இந்த நாடகத்துக்கு நான் அர்த்தம் சொல்லிக்கொண் டிருக்கப் போவதில்லை. இதைப் பற்றிச் சொல்ல இன்னும் எவ்வளவோ மனதில் முண்டுகிறது. ஒரு விஷயம் இங்கு சொல்ல வேண்டும். காட்சிப் படிம களை கற்பனையில் காண்பதற்கு நமக்கு வேண்டிய பயிற்சி உள்ளது. பிரமாதமான கலைப் படங்களை பார்த்துப் பார்த்து காட்சிகளை கற்பனை பண்ணிக் கொள்ளும் அனுபவம் நமக்கு கைவந்துவிட்டது. அதை இங்கு பிரயோகியுங்கள். அப்போது இந்த ஒரு நாடகத்தை காலச்சுவடு இதழ் வெளியிட்டதற்காக அந்த ஞானத் தந்தையைப் பாராட்டலாம் என்று தோன்றும்.

மேலும் ஒன்று சொல்லத் தோன்றுகிறது. கிறிச்சு கிறிச்சு விஷயம். ஒரு ராகம் ஆலாபனை செய்வதுபோல இருக்கிறது நாடகத்தின் வசனம். அப்போது கிறிச்சுக்கு மதிப்பு வருவது தெரியும். மேலும் இது ஒரு கவிதை. மேடையில் பார்க்க வேண்டிய கவிதை. மீண்டும் ஒருமுறை இதை மேடையேற்றும்போது தோன்றும் பிரச்சனைகளைக் கவனத்தில் கொள்ளாது—என்னைப் போல முதல் சந்தர்ப்பத்தைத் தவறவிட்டவர்கள்—படிக்கவேண்டும் என்று தோன்றுகிறது.

[illegible] காமராஜர் பல்கலைக்கழக நாடகக் கலைத் துறையின் சார்பில் [illegible] ராமமூர்த்தியின் 'என் கப்பலுக்கு நானே கேப்டன்' நாடகம் [illegible] பல்கலைக்கழக வளாகத்தில் ஜனவரி 18 நடைபெற்றது.

[illegible]தாஸ் சுவாமிகள் நாடகப்பள்ளி பாண்டிச்சேரி, ஷேக்ஸ்பியரின் [illegible] Lear-ஐத் தழுவி எழுதப்பட்ட இந்திரா பார்த்தசாரதியின் 'இறுதி [illegible] நாடகத்தை பாண்டிச்சேரி கம்பன் கலை அரங்கில் மார்ச் [illegible]தேதிகளில் நிகழ்த்தியது.

[illegible] சிந்தனை ஆண்டு விழாவில் சுந்தர ராமசாமியின் 'திரைகள் [illegible] சிறுகதை நாடக வடிவில் கோமல் சாமிநாதன் இயக்கத்தில் [illegible]ப்பட்டது.

[illegible]தார்த்தா குழுவினர் புதுமைப்பித்தனின் கதையைத் தழுவி 'தனி [illegible]க்கு' நாடகத்தை பென்னேஸ்வரனின் இயக்கத்தில் டில்லியில் [illegible]18 நிகழ்த்தினர்.

[illegible]றச் சூழல் சீர்கேட்டை மையமாக வைத்து சென்னை கூத்துப் [illegible] தயாரித்த நாடகம் மாக்ஸ் முல்லர் பவனிலும், சிற்றரங்கத்திலும் [illegible]யப்பட்டது. நடிகர்கள் எந்தச் செய்தியையும் நாடகமாக கொண்டு [illegible]யும் என்பதை உறுதிப்படுத்துவதாக நாடகம் இருந்தது.

[illegible]வில் அண்மையில் துவங்கப்பட்ட நாடக அகாடமி (திரு. ராது [illegible]முத்து அவர்களின் முயற்சியில்) முதல் கட்டமாக நிகழ்த்திய [illegible]நாடக நிகழ்ச்சியில் சில தவிர நாடகங்கள் உள்ளிட்ட 29 நாடகங் [illegible]ற்றன. பாராட்டத்தக்க முயற்சி.